48. கல்லாடனார் (9 ; 83 ; 113 ; 171 ; 199 ; 209 ; 333):—

இவரது ஊர் கல்லாடம் என்பது. அது மலையாளம் ஜில்லாவில் உள்ளது. இவர் இருப்பைப்பூவை மொட்டம்புக்கு உவமித்துள்ளார். வினைமுற்றிமீளுந் தலைமகன் தலைவியை நினைந்து புலம்புவதாக இவர் கூறியபாடல் மிகவும் சுவையுடைத்து. புல்லி நாட்டிலுள்ள வேங்கடத்தினையும், ஆங்கு யானைக்கன்றைப்பிடித்து வந்து இளைஞர் கள்ளொடையில்லிற் கட்டிவிட்டுக் கள்ளருந்திப் போவதனையும் கூறுகின்றார். புறத்தினும் "புல்லி வேங்கட விறல்வரை" எனப் புகழ்ந்தனர். (புறம் 385). கோசரது நட்பிற் கோடாப் பெருங்குணத்தையும், அவர் அகுதையைக்காத்த பெருமையினையும், பாணன் என்ற சிற்றரசன் படைவீரர்கள் நிரைகவர்தற் சிறப்பினையும், வாகைப்பெருந்துறைப் போரில், பொலம்பூண் நன்னனைக் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் வென்று தான் இழந்தநாட்டை மீளக் கைப்பற்றின கதையினையும், ஆலங்கானப் போரில் நெடுஞ்செழியன் இருபெருவேந்தரையும், ஐம்பெருவேளிரையும் வென்ற சரிதையினையும் கூறியுள்ளார். புறத்தும் (23) இச்சரிதையைக் கூறினர். முள்ளூர் மன்னன்காரி, கொல்லித் தலைவனை ஓரியைக் கொன்று, அம்மலையைச் சேரலர்க்கு உரிமையாக்கின வரலாற்றினையும், கொல்லிப்பாவை கடவுளால் அமைக்கப்பெற்றதென்பதனையும் விரித்தனர். மற்றுமிவர் குறுந்தொகையில் தொண்டையரது மலையையும் (குறுந். 260). புறத்தில் (285; 391) அம்பர் கிழான் அருவந்தையையும், பொறையாற்று கிழானையும் பாடினர். திருக்குறளையும் புகழ்ந்து பாடியுள்ளார் (வள். மா 9.) யாப்பருங்கல விருத்தியில் கல்லாடனார் சூத்திரங்கள் எனச் சில காணப்படுகின்றன.

49. காவட்டனார். (378):—

இவர், சிறைப்புறமாகத் தலைவி சொல்லுவதாகக் கூறும்பாட்டுப் பெரிதுஞ் சுவையுடைத்து ; புறத்தில் இவர் அந்துவன்கீரனைப் பாடியுள்ளார் (புறம் 359)

50. கழார்க் கீரனெயிற்றியார் (163 ; 217 ; 235 ; 294):—

இவர் கீரன் என்பவர்க்கு உறவினர்போலும். காதலனைப் பிரிந்து புலம்பும் மகளிர் கூற்றாகவே இவர் பாடல்கள் செய்துள்ளனர்.

இவரது ஊர் சோழநாட்டில் தஞ்சை ஜில்லா மாயூரம் தாலுக்காவிலுள்ள கழார் என்பது. இவர் வேடர் மரபினர்.

**51. காட்டூர்கிழார்மகனார் கண்ணனார் (85).—**

இவர் வேளாளர். காட்டூரென்பது இன்னவிடத்துள்ளதென்று விளங்கவில்லை. இவர் தொண்டைமான் இளந்திரையனது வேங்கடமலையைப் புகழ்ந்துள்ளார்.

**52. காவன்முல்லைப் பூதனார். (21; 151; 241; 293; 391;:—**

இவரது இயற்பெயர் பூதனென்பது. காவன் முல்லை என்பது புறத்திணையில் ஒரு துறை. இவர் அத்துறையிற் பாடும் வல்லமையுடையார்போலும். இவர் உழிஞ்சிலின் கவர்த்த கோட்டிற்கு மான் கோட்டினை உவமித்துள்ளார்(அகம் 151). காட்டி லுதிரும்நெல்லிக்காயை வட்டக் கழங்காகக்கொண்டு செம்முக மந்தி ஆடும் என்றும் (அகம் 241), அதிரற்பூ வெருகின் எயிறு போலுமென்றும் கூறியுள்ளார் (அகம் 391). குறுந்தொகையில் இவர் பாடியனவாக இரண்டு பாடல்களும் நற்றிணையில் ஒன்றும் காணப்படுகின்றன.

**53. காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார். (107;123;285):—**

இவரது ஊர் காவிரிப்பூம்பட்டினம் இவர் வணிகர் மரபினர் (தொல். பொருள். மரபு. 74).வடுகர் தேக்கிலையில் உண்ணும் வழக்கினையும் நிரைகோடற் சிறப்பினையும், வேட்டையில் செந்நாய்கள் மானின் ஓடுங்குறங்கறுத்து அதனை யெளிதிற் பற்றுவதனையும் பாராட்டுவர். இவர் தமது ஊராகியகாவிரிப் பூம்பட்டினத்தைச், "சோழர் கழைமாய் காவிரி கடன்மண்டு பெருந்துறை" எனச் சிறப்பித்துள்ளார். சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவனும் பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்தமைக்கு வியந்துபாராட்டிப் பாடினர். பிட்டங் கொற்றனைப் புகழ்ந்தனர்.

**52. காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார் (103; 271):—**

இவரது ஊரும் காவிரிப்பூம்பட்டினமே. இவர் அவியன் என்னும் கொடையாளி ஒருவனைப் புகழ்ந்துள்ளார்.

55. குடவாயிற் கீரத்தனார் (35; 44; 60; 79; 119; 129; 287; 315; 345; 366; 385):—

இவரது ஊராகிய குடவாயில், தஞ்சை ஜில்லாவிலுள்ளது. இவர் நடுகற் சிறப்பையும், அதற்கு நிவேதிக்கப்பெறும் தோப்பிக் கள்ளையும், இடப்பெறும் தருஉப்பலியையும், சூட்டப் பெறும் மயிற்பீலியையும் பாராட்டி யுள்ளார். திருக்கோவலூர் அரசனான காரியின் பெண்ணையாற்றுக்கொடுங்கான் முன்றுறையையும், சேரன் படைத்தலைவர்களான நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுறை, கணையன் என்பார்கள் ஒன்றுசேர்ந்து பெரும்பூட் சென்னியைக்கழுமலத்தில் எதிர்த்த சரித்திரத்தையும், அக்கழுமலப் போரில் அச்சென்னியின் சேனாபதியான பழையன் பட்டிறக்கச் சேரழன் சினந்து கணையனை அகப்படுத்தினதோடு, கழுமலத்தையும் கைப்பற்றிக்கொண்டமையையும் கூறியுள்ளார். சோழரது திரவிய சாலை தமது குடவாயிலிலமைக்கப் பெற்றிருந்ததென்று கூறியுள்ளார் (அகம் 35; 44).

மற்று மிவர் பொறையன் தொண்டியையும், வழுதிகூடலையும், சோழர் காவிரியையும், ஏழிற்குன்றத்தையும், கொங்கரது ஆநிரைப் பெருக்கத்தையும், மழவர் கொழுப்பாவெறிந்து ஊன் புழுக்கயர்வதனையும், எவ்விநாட்டின்கண் மருதநிலமும், நெய்தல் நிலமும் மயங்கிக்கிடக்கும் அழகினையும் மிகச்சுவைபட வருணிக்கின்றார் (அகம் 60; 79; 129; 315; 345; 366; 385).

56. குமிழிஞாழார் நப்பசலையார். (160):—

இவர் பெண்பாற்புலவர். குமிழிஞாழார்க்கு உறவினரென்று ஊகிக்கப்படுகிறார். இவர் பெண்யாமை முட்டையிடும் முறையினையும், அம்முட்டை ஆண்யாமையாற் பாதுகாத்துவரப்படுதலையும் விரிவாய்க் கூறியுள்ளார். குறுந்தொகையிலும் "தாயின் முட்டை போல வுட்கிடந்து சாயி னல்லது பிறிதெவ னுண்டத்தோ, யாமைப் பார்ப்பி னன்ன காமங் காதலர் கையற விடினே," எனப்பட்டது நோக்குக (குறுந். 152).

57. குறுங்குடி மருதனார். (4):—

இவரது ஊர் குறுங்குடி. இக்குறுங்குடி திருநெல்வேலி ஜில்லாவில் ஒரு விஷ்ணு ஸ்தலமாகவுள்ளது. இவர் உறையூர்க்குக்

கீழ்பாலுள்ள சிராப்பள்ளி மலையினைப் புகழ்ந்து பாடியுள்ளார். இவர் பாடலொன்று குறுந்தொகையிலும் காணப்படுகின்றது (344).

58. குன்றியனார். (40 ; 41.):—

இவர் தலைவி புலம்புவதாகக் கூறிய 40 ஆம் செய்யுளும், தலைவன் புலம்புவதாகக் கூறிய 41 ஆம் செய்யுளும் படிப்போர் கன் மனத்தையுங் கரையச்செய்யும்.

59. கோட்டம்பலத்துத்துஞ்சிய சேரமான். (168):—

இவர் பெயர் கோட்டம் பலத்துத்துஞ்சிய மாக்கோதை எனப் புறத்து (245)வழங்கப்படுகிறது. இவர் மனைவியை இழந்து பாடிய பாடல் கன்மனத்தாரையும் இரங்கச்செய்யும் (புறம் 245). ஆன் குன்றிற் கருகிலுள்ள குழூஉரின்கண் வருந்திவந்தோர்க்கு உணவளித்தற்பொருட்டு உதியன் சமைத்த அட்டிலை வருணித்துள்ளார்.

60. கோடிமங்கலம் வாதுளி நற்சேந்தன். (179 ; 232.):—

கோடிமங்கலம் என்பது மதுரை ஜில்லாவிலுள்ளது. வாதூல கோத்திரத்து நற்சேந்தனெனவே இவர் அந்தணர் மரபினராவர். யானை, பேய்த்தேரை மழையெனநினைத்து வாய்திறக்கும் என்றும் மழை முழக்கங்கேட்டுப் புலி முழக்கமென்று அது அஞ்சியோடுமென்றும் கூறுவது சுவைபயவாநிற்கும்.

61. கோடியூர்கிழார்மகனார் நெய்தற்றத்தனார் (244) :—

நெய்தல் தத்தனார் என்றமையால் இவர் நெய்தற்றிணையைப் பாடுவதில் வல்லார்போலும். அப்பாடல் கிடைத்திலது. இவர் வேளாளர். கோடியூர் எந்நாட்டிலுள்ளதென்று விளங்கவில்லை.

62. சாகலாசனார். (16 ; 270;):—

சாகல் என்பது இவர் ஊர்ப்பெயர்போலும். பரத்தைமனையினின்றும் வந்த தலைவன் நாணும்வண்ணம் தலைவிகூறுவதாக இவரியற்றியபாடல் மிகவுஞ் சுவைபயப்பதொன்றாகும். இவர் குட்டுவனையும் அவனது கழுமலத்தையும் புகழ்ந்துள்ளார்.

63. செயலூர் இளம்பொன்சாத்தன் கொற்றனார். (177):—

சாத்தன் என்பது இவரது தந்தை பெயர். செயலூர் இவரது ஊராகும். இவர் பொன்வாணிகர். மயில், பாகற்பழம் உண்டலைக்

கூறுகின்றார். அயிரியாறு இவராற்புகழப் பெற்றுள்ளது. சிறுகுடிக்கிறைவனாகிய பண்ணனைப் புகழ்ந்துள்ளார்.

**64. செல்லூர்க் கோசிகன்கண்ணனார் (66):—**

இவர் கௌசிக கோத்திரத்துக் கண்ணனார் என்ற இயற்பெயரையுடைய அந்தணர். செல்லூர் சோழ நாட்டின் கீழ் கடற்கரையின் கண்ணதான ஓர் ஊர் (அகம் 90). மக்கட்பேறுடையார்க்கே இம்மை மறுமைப்பயன் உளவாகுமென்று கூறியுள்ளார்.

**65. செல்லூர்கிழார்மகனார் பெரும்பூதங்கொற்றனார் (250):—**

பெரும் பூதன் என்பது இவர் தந்தைபெயர். கொற்றன் இவரது இயற்பெயர். இவர் வேளாண்வருணத்தினர். இவர் நெய்தலைப்புனைந்து பாடியுள்ளார்.

**66. சேந்தங் கண்ணனார். (350):—**

சேந்தன் இவரது தந்தை பெயர். கண்ணன் இவரதியற்பெயர். இவரது பாடல் நற்றிணையிலும் (54) காணப்படுகின்றது. இவர் நெய்தற்றிணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

**67. சேரமானிளங்குட்டுவன். (153):—**

இவர் சேரர் மரபினர். இவர் பாலைத்திணையில் உடன் போக்குக் கூறுகின்றார். கோங்கின் மலர் உதிர்வது கைவிடுசுடர்போலுமென்று வருணிப்பது சுவைபயவாநிற்கும்.

**68. தங்காற் பொற்கொல்லனார். (48 ; 108 ; 355):—**

இவர் பொன்செய் கொல்லர். தங்கால் பாண்டி நாட்டிலுள்ள ஒரு விஷ்ணு ஸ்தலம். திருத்தண்கால் என வழங்கும். தங்கால் பூட்கோவலனார் என்றும், தாட்கோவலனார் என்றும் புறத்துக் காணப்படுகின்றது. இவர் புலி புலி என்று கூவிக் குறமகளிர் வேங்கைப்பூப் பறிக்கும் வழக்கினைக் கூறுகின்றார். செவிலித் தாய்க்குத் தோழி அறத்தொடு நிற்பதாக இவர் கூறும்பாடல் மிகச் சாதுரியமாக வுள்ளது. கோண்மா என்ற தீங்கிழைக்கும்

விலங்கு வழங்குகின்ற வழியென ஆற்றினருமை கூறுகின்றார். நம் உடம்பு மெலிவைக்காட்டித் தலைவனைப் போகாமல் தடுப் போம்வாவெனத் தலைவி தோழியை யழைப்பதாகச் சொல்லுவது சுவைபயவாநின்றது. இவர் பாடலாக நற்றிணையில் ஒன்றும், குறுந் தொகையில் ஒன்றும், புறத்தில் ஒன்றும் அகத்தில் மூன்றுமாக ஆறுபாட்டல்கள் காணப்படுகின்றன. தங்கான் முடக்கொற்றனார் என்றும் சில பிரதிகளில் இவர்பெயர் காணப்படுகின்றது.

69. தொண்டி ஆமூர்ச்சாத்தனார். (169).—

ஆமூர் என்பது சேரநாட்டில் குறும்பொறை மலைக்குக் கீழ் பாலுள்ள ஓர் ஊர். தொண்டி யாமூர் என்பது தொண்டி நாட்டைச் சார்ந்த ஆமூர் என்று பொருள்படும். இவர் பாலையைப் புனைந்து பாடியுள்ளார்.

79. தோல்கபிலர். (282):—

இவர் "பொய்யாநாவிற் கபிலன்; வாய்மொழிக் கபிலன்" எனப்படும் அந்தணக்கபிலரின் வேறு. இவரும் அக்கபிலரை ஒப்பக் குறிஞ்சியைப் புனைந்து பாடியுள்ளார்.

74. நக்கண்ணையார். (252):—

இவர் பெருங்கோழி நாய்கன் மகளாவார் (புறம், 83; 84.). போர்வைக்கோப் பெரு நற்கிள்ளியைக் காதலித்து, இவர் அவனது மல்வென்றியைப் புகழ்ந்து பாடியுள்ளார். அன்னை துஞ்சாமற் காத்தலை எடுத்து உவமை முகத்தாற் கூறிய இவரது பாடல் புலவர் களுக்குப் பெரிதும் மகிழ்வூட்டுவதொன்றாம்.

72. நக்கீரனார். (36; 57; 78; 93; 120; 126; 161; 205; 227; 249; 253; 290; 310; 340; 346; 369; 389;):—

இவர் பெயர் கீரன் என்பது; ந என்பது சிறப்புப் பொருளு ணர்த்தும் இடைச்சொல். இவர் தந்தையார் மதுரைக் கணக்காயனார். (கணக்காயனார் - பள்ளிக்கூட உபாத்தியாயர்.) இவர்மகனார் கீரங் கொற்றனார். இறையனார் செய்த அகப்பொருட்சூத்திரத்திற்கு மெய் யுரைகண்டவர் இவர். நாலடி நாற்பதென்னும் யாப்பிலக்கணங் கூறும் ஒரு நூலும், பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படையும், நெடுநல்

வாடையும் இவர் இயற்றினவாம். பலவிடத்தும் (நற். 258; 358, அகம் 227) பாண்டியனுக்கு உரிய மருங்கூர்ப் பட்டினத்தையும், அதன்கண்ணதான ஆவணத்தையும் இவர் சிறப்பிக்கின்றார். செழியன் மறவனான வாணனது சிறுகுடியையும், அருமனது சிறுகுடியையும் புகழ்ந்துள்ளார் (நற்றிணை 349; 367). இவர் தலையாலங்கானத்தில் நெடுஞ்செழியனோடு போரேற்ற எழுவரும் பட்டமையையும், கபிலர் கிளிகளை வளர்த்து நெற்கதிர் கொணரவிடுத்துப் பாரியையும் அவன் படையையும் காத்தமையையும், சோழரது உறந்தைக்கண்ணதான அறந்துஞ்சும் அவையினையும் காவிரியையும் காவிரிப்பூம்பட்டினத்தையும், வழுதியின் கொற்கையினையும் கூடலையும் அதன் கண்ணதான நாளங்காடியினையும், சேரனது தொண்டி, கருவூர், ஆன்பொருநை முதலியவற்றையும், எவ்வி அடக்கவும் அடங்காமல் திதியனொடு பொருத அன்னி மாண்ட கதையினையும், கரிகாற் பெருவளத்தான் தான் இழந்த அரசுரிமையை மீட்டும் எய்திய வரலாற்றினையும், தூங்கல் பாடிய தழும்பனது ஊணூரையும், வேம்பிநாட்டினனை முசுண்டை யென்னும் கொடையாளி ஒருவன் அகவுநர்க்கு ஏற்றுப்பரிசில் முதலியன ஈயும் சிறப்பினையும், மழவர் நாகாவீழ்த்துத் திற்றி தின்றலையும் அவரது கோடை மலையையும், பசும்பூட்பாண்டியன் கொங்கரை ஓட்டியதனையும், வடுகர் தலைவனான எருமை என்பானது நாட்டிலோடும் அயிரியாற்றினையும், திரையனது பவத்திரியையும், பழையன் மாறன் கூடற்பறந்தலைக்கண்ணே கிள்ளிவளவனைச் சாய்த்தமை கண்டு கோதைமார்பன் உவந்ததனையும், வானவரம்பன் நன்னாட்டினையும் இவ்வகத்திற் புகழ்ந்துள்ளார். குயக்கொண்டான் என்பான் ஒருவனைச் சாவவும் பிழைக்கவும் பாடினர் எனத் தொல்காப்பிய உரையில் (தொல். பொருள். 490) காணப்படுகிறது. புறத்தில் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறனும், பிடவூர்கிழான்மகன் பெருஞ்சாத்தனும் இவராற்பாடப் பெற்றோராவர். பத்துப்பாட்டின் இரண்டாம் பதிப்பின் 9 ஆம் பக்கத்தின் கீழ்க்குறிப்பில் அகநானூறு 57 ஆம் பாட்டிலுள்ளதாகக் காட்டப்பட்டுள்ள "வரைவயிறு கிழித்த நிழறிகழ் நெடுவேற், றிகழ்பூண் முருகன் றீம்புனலலைவாய்" என்ற அடிகள் எனக்குக் கிடைத்த அகநானூற்றுப் பிரதிகளில் ஒன்றிலாவது காணப்படவில்லை. "பையுண்மாலைப் பழுமரப்படரிய" என்று தொடங்கும் தொல்காப்பிய வுரை மேற்கோட்பாட்டில் இவ்வடி காணப்படுகின்றது (தொல். பொருள். 114).

73. நரைமுடி நெட்டையார். (339):—

இவர் நிரைமுடி நெட்டையாரெனவும் வழங்கப்பெறுவர். தோழிபதிந்த குழியில் நீரோடுவது பாம்பு வரிசையாக முடுகுவதுபோலுமென்று கூறுவது வியப்புத்தராநின்றது,

74 நல்லாவூர்கிழார். (86) : —

இவரது ஊராகிய நல் ஆவூர் எவ்விடத்திலுள்ளதென்று விளங்கவில்லை. இவர் வேளாளர். அகப்பாட்டிற்குப் பேரெல்லையாகக் கூறப்படும் முப்பத்தோரடியுள்ள பாடல் இவருடையதாகும். பண்டைக் காலத்துக் கலியாணச் சடங்கின் முறையை இவர் பாடலால் அறியலாம். நற்றிணையில் 158 ஆம் பாடல் இவர் பாடியதாகும்.

75. நன்பலூர்ச் சிறுமேதாவியார். (94; 394):—

இவர் நல்லூர்ச் சிறுமேதாவியாரெனவும் கூறப்படுவார். முல்லைத்திணையைப் புனைந்து பாடியுள்ளார். இடையர், வாயை மடித்து விடும் வீளைக்கு முயல் வெருவிப் புதலின்கண் ஒளிக்குமென்றும், நரியினது ஊளை முதைப்புனங்காவலரது கோட்டோசையோடு ஒருங்கொலிக்குமென்றும் வியப்புறக் கூறியுள்ளார்.

76. நெய்தற்சாய்த்துய்த்த ஆவூர்கிழார். (112).—

இவர் வேளாண் வருணத்தினர். தலைமகனைத் தோழி வரைவு கடாவுவதாகச் செய்துள்ள இவர்பாடல் மிக்க சுவை பயக்கும்.

77. நொச்சிநியமங்கிழார். (52).—

இவர் வேளாளர். நொச்சிநியமம் ஓர் ஊர். வேங்கை மலரைக் கொய்யக் குறமகளிர் புலி புலி யென்றுகூற, ஆடவர் வில்லுங்கையுமாய்ப் புலிகாக்கவந்து வெள்கிப் போவதனைச் சுவைபடப் பாடியுள்ளார். நற்றிணையில் இவர்பாடிய பாடல்கள் நிரம்பச் சுவையுடையனவாய்க் காணப்படுகின்றன.

78. நோய்பாடியார். (67):—

"யானெவன் செய்கோ" என்னும் இவரது பாட்டுப் பிரிந்த புலம்பு நோயை நன்கு புலப்படுத்தலால் இவர்நோய் பாடியார் எனப்பட்டனர் போலும். நிலம்படு மின்மினிபோலப் பரல் கடத்திடத்து இமைக்கும் என்று வியப்புற வருணித்திருக்கிறார். நடுகற்குப் பீலி

சூட்டும் வழக்கினையும், நடுகலிடத்தவன் பிடித்த வேல்முதலிய கருவிகளை அங்குச் சார்த்தும் வழக்கினையும் வருணிக்கின்றார்.

79. பரணர். (6; 62; 76; 116; 172; 125; 135; 142; 148; 152; 162; 178; 181; 186; 196; 168; 298, 212; 222; 228; 236; 246; 258; 262; 266; 276; 322; 326; 356; 367; 372; 376; 386; 396) :—

இவர் கபிலரை ஒப்பப் பாடும் பெரும்புலவர். நக்கீரர், ஔவை முதலியோராற் புகழப்பெற்றவர். பதிற்றுப்பத்தில் ஐந்தாம்பத்தினை இயற்றிய ஆசிரியர். அகத்தில் இவராற் பாடப்பெற்ற விஷயங்கள் மிகப்பல. அவற்றுட்சில அடியிற் கூறுவாம். அகுதை, அஞ்சி அன்னி, ஆஅய் அண்டிரன், ஆஅய் எயினன், ஆட்டனத்தி, எவ்வி, ஓரி, கட்டி, கணையன், கரிகால்வளவன், கழுவுள், குட்டுவன், குறும்பியன், தழும்பன், தித்தன், திதியன், நள்ளி, நன்னன் ஆஅய், நன்னன் உதியன், நீர்கிழவோன், பசும்பூட்பாண்டியன், பழையன், பாணன், பிண்டன், பேகன், பொறையன், மாந்தரம் பொறையன், மத்தி, மிஞிலி, வல்லங்கிழவோன், என்றதலைவர்களும்; அகுதை, அன்னிமிஞிலி, ஆதிமந்தி, ஐயை, மருதி என்ற தலைவியர்களும்; ஆரியர், பதினான்குவேளிர், பூழியர் என்ற கூட்டத் தார்களும்; கவிரத்துச்சூர்மகள், கொல்லிக்கடவுள், முக்கட்செல்வன், முருகன், பாழி அணங்கு, நள்ளி அடுக்கத்துச்சூர், என்றதெய்வங்களும்; திருச்சீர் அலைவாய், ஆலமுற்றம், கூடல் என்ற புண்ணியஸ்தலங்களும் பிறவும் இவராற் பாடப்பெற்றுள்ளன. திருக்குறளைப் புகழ்ந்தனர் (வள். மா. 6.).

80. பறநாட்டுப் பெருங்கொற்றனார். (323):—

'நறுநீல நெய்தலும் கொட்டியுந் தீண்டிப், பிறநாட்டுப் பெண்டிர், முடிநாறும் பாரி, பறநாட்டுப் பெண்டிர் அடி" எனவருதலால், பறநாடு பாரியினது நாடாகும். யானைச் செல்லினம்போலப் புயல் இயங்காநின்றதென அழகிய உவமை கூறியுள்ளார்.

81. பாண்டியன் அறிவுடைநம்பி. (28):—

இவர்பாண்டியர் மரபினர். ஞானியும் புலவர் பெருமானுமாகிய பிசிராந்தையாரொடு பழகிவந்தவர். அறிவுமுதிரப்பெற்றமையால் அறிவுடை என்னும் அடைபுணர்க்கப் பெற்றார். நம்பிஎன்பது புருஷச்

சிரேட்டன், பூர்ணன் எனப்பொருள்படும், பகலேசிறைப்புறமாகத் தோழி கூறுவதாகக்கூறும் இவரது பாடல் வியப்பைத்தருவதாகும். மக்கட் பேறில்லார்க்கு எத்துணைதான் மற்றப்பேறு நிரம்பியிருப்பினும்புருஷார்த்தம் நிறைவுற்றதின்று என்றுகூறியுள்ளார் (புறம் 188).

82. பாண்டியன் கானப்பேரெயில்தந்த உக்கிரப்பெருவழுதி (26):—

இவர் இவ்வகப் பாட்டை உப்பூரிகுடிகிழார் மகனுவார் உருத்திரசன்மரைக்கொண்டு தொகுப்பித்தவர். கானப்பேரெயிலின் கண்ணேகுறும்புசெய்திருந்த வேங்கைமார்பன் என்னும்கொடியோனே வென்று, அக் கோட்டையைக் கைப்பற்றின்மை நோக்கி இவர் இவ்வாறு அடைகொடுக்கப் பெற்றூர் (புறம் 21). இவரது அவையில் திருக்குறள் அரங்கேறியதாக ஒருகதை வழங்குகிறது. இவர் குறளைப் பாராட்டிப் பாடியுள்ளார் (வள். மா. 4). இவர் காலத்தவர் சேரமான்மாவண்கோவும், சோழன் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளியுமாவார்.

83. பாண்டியன் ஏனாதிநெடுங்கண்ணனார் (373) :—

ஏனாதி என்பது அரசரால் வீரர்க்கு அளிக்கப்படும் பட்டம் (தொல். பொருள். புறத். 8). பாண்டிய அரசனால் ஏனாதிப்பட்டங் கொடுக்கப்பட்ட யுத்தவீரராவர் இவர். பகைவர் கோட்டையை அகப்படுத்தற் செய்தியும், முனைகவர்ந்து கோடலாற் பீரெழுந்து பாழ்பட்ட மன்றங்களின் வருணனையும் இவர் பாடல்களிற் காணப்படுகின்றன.

84 பாரதம்பாடிய பெருந்தேவனார் (கடவுள் வாழ்த்து.)

எட்டுத்தொகையுள் நற்றிணை, குறுந்தொகை முதலிய பெரும்பாலவற்றிற்கு இவர்பாடல்கள் கடவுள் வாழ்த்தாக முன்வைக்கப் பெற்றுள்ளன. நற்றிணையில் திருமாலையும், குறுந்தொகையில் முருகக்கடவுளையும், ஐங்குறுநூறு அகம் புறம் மூன்றிலும் சிவபிரானையும் பரவிய பாடல்கள் காணப்படுகின்றன. வடமொழிப் பாரதத்தை இவர் தமிழிற் பாடியுள்ளார். அதுமுழுவதும் இக்காலத்துக் கிடைத்திலது.

85. பாலைபாடிய பெருங்கடுங்கோ (5 ; 9 ; 111 ; 155; 185 ; 223; 261 ; 267 ; 291 ; 313 ; 337 ; 397) :—

பாலைத்திணையைச் சுவைபடப்பாடும் போற்றல்கருதி இவர் பாலை பாடிய என்ற அடை கொடுக்கப்பெற்றூர். சேரமான் என்ற

அடை இவர் பெயர்முன் காணப்படுதலால் (புறம் 11), இவர் சேரர் மரபினராவார். பெரும்புலவரேயன்றி மிக்க வீரமுமுடையவர். கலி யில் பாலைக்கலி இவர்பாடியதாகும். இதனைப் "பெருங்கடுங் கோன் பாலை" என்றதனுன் அறியலாம். இவர், மழவர் தூதுசெல் லும் பார்ப்பானைத் தடிந்துவீழ்த்தி அவனிடத்து ஒன்றுங் காணது வறுங்கையராய்ப் போவதனை வருணித்துள்ளார் (அகம் 337).

86. பாவைக்கோட்டிலார் (336) :—

யானை அருளுதலாற் பாகன் பிழைத்திருப்பதுபோல யான் விழவிடத்து வாரர்திருத்தலினுல் இற்பரத்தை உயிர்வாழ்கின்று ளெனச் சேரிப்பரத்தை கூறுவதாகக் கூறும் இவரதுபாட்டு இன் சுவை பயவாநின்றது. சோழரது வல்லத்துப் புறங்காட்டில் ஆரியர் படை பட்டமையைக் கூறுகின்றார்.

87. பிசிராந்தையார்.—(337):—

இவரது ஊர் பாண்டிநாட்டின் கண்ணதான பிசிர் என்பது (புறம் 215). இவர் சிறந்த ஞானி; அறிவு நிரம்பிய புதல்வர்களையும், கற்பிற்சிறந்த மனைவியையும், உள்ளம்போல ஏவல்செய்யும் ஏவ லாளர்களையும், உடையவராய், ஞானிகளோடு பழகி வந்தவர் (புறம் 191). கோப்பெருஞ்சோழன் என்பானீ பெரியஞானியென்று கேள்வியுற்று அவனைநேரில் காணுதிருக்கச்செய்தேயும், அவனோடு விள்ளாநட் புடைமை பூண்டு (புறம் 215), அவன் துறந்த காலத்து அவ்வரலாற்றை ஒத்த உணர்ச்சியால் அறிந்து (குறள் 39 உரை) உடன்துறந்த பெருமையுடையவர் (புறம் 218). மலைமீது சூழ்ந்துள்ள வெண்மழையைக் குயவன் சூளைமேற் சூழ்ந்துள்ள புகைக்கு ஒப்பிட்டுக் கூறுகின்றார்.

88. பெருங்குன்றூர்கிழார். (8) :—

இவர் வேளாளர். சேரமான் குட்டக்கோ இளஞ்சேரலிரும்பொ றையைப்புகழ்ந்து பாடிய இவர் பாடல்கள் பதிற்றுப்பத்து 9 ஆம்பத் தாகத் தொகுக்கப்பெற்றுள்ளது. இவ்வரசன் தமையனுன குட்டக் கோச்சேரலிரும் பொறையை இவர் இகழ்ந்து பாடியுள்ளார் (புறம் 120; 211.). இவர்பாடிய அகம் 8 ஆம் பாட்டிற்கு அக பாட்டுரைகாரர் கூறிய உள்ளுறை இறைச்சி முதலியவற்றை நோக்கி மகிழ்க. புறத்தில் இவர் பேகனையும், சோழன் உருவப் பஃறேர் இளஞ்சேட்சென்னியையும் புகழ்ந்து பாடியுள்ளார்

89. பெருந்தேவனார். (51) :—

இவர் பாரதம்பாடிய பெருந்தேவனாரின்வேறு என்பதை யுணர்த்தவே ஒரடையுமின்றிப் பெருந்தேவனார் என்றே கூறப் பட்டனர் என ஊகித்தற்கிடனாகிறது. கடுகுபெருந்தேவனார் என ஒரு பாடம் காணப்படுகின்றமையால் இவர் ஊர் கடுகு என்று கொள்ளலாம். அன்றிக் கடுகுபெருந்தேவனார் என்பார் வேறோர் புலவராகவு மிருக்கலாம். எருவைப்பேடைக்கு ஊனிடத்துள்ள விருப்பத்தை நோக்கி ஊனைப்புதித்தாலன்ன செஞ்செவி எருவை என எருவையின் காதினை வருணிக்கின்றார்.

90. பேயனார். (234).

இவர் ஐங்குறு நூற்றில் முல்லைப்பாட்டு நூறும் இயற்றியவர். முல்லைத்திணையைப் பாடுவதில் பேராற்றலுடையவர். தலைமகன் தேர்ப்பாகனை 'விரையத்தேரூர்வாயாக; யான் என் மனைவியைக் காணவேண்டு'மெனக் கூறுவதாகக் கூறும்பாடல் இன் சுவை பயப்பதொன்றாகும்.

91. போதும்பில்கிழான் வெண்கண்ணனார். (130 ; 192):—

இவர் வேளாளர். பொதும்பு பாண்டிநாட்டின் கண்ணதான ஊர். இவர் தாழையின்தலை பேய்த்தலைபோன் றுள்ளதென்றும், கிளியின் கழுத்திரேகை வானவிற்போன்று விளங்குகின்றதென் றும் கூறிய உவமைகள் வியப்பினைப் பயவாநின்றன. "அருவி யடித்துக்கொண்டுவந்த நாகரத்தினம் வீசிய ஒளியால் எம்மூரில் இரவு முழுதும் தீபம் வைத்ததுபோன்றிருத்தலால், தலைவி இரவுக் குறியிடத்து வரக்கூடாதவளாயிருக்கின்றா" ளெனத் தோழி கூற் றாக இவர் கூறுவது மிக்க சுவையுடையதொன்றாகும். இவர் வெண்கண்ணனாரென்றுங் கூறப்படுவர்.

92. போதும்பிற் புல்லாளங் கண்ணியார். (154):—

இவரது ஊரும் மேற்சொன்ன பொதும்பு என்னும் ஊரே. கண்ணியார் என்றமையானே இவரைப் பெண்பாற் புலவராகக் கருதலாகும். புல்லாளனுக்கு இவர் உறவினர் போலும். இவர் தரை ஒலிக்குச் சிறு பல்லியத்தை உவமை கூறுகின்றார். கோடல் அணியவிழ்வது பாம்பின் படம் விரிப்பதுபோன் றிராநின்ற தென்று வியப்புறவருணிக்கின்றார்.

93. பொருந்தி லிளங்கீரனார். (19 ; 351):—

பொருந்தில் என்பது ஓர் ஊர். இளங்கீரன் என்பது இவரியற் பெயர். இவர், தலைமகன் தலைமகளை நினைந்து இரங்கிச் சொல்லுவதாகச்செய்த மேற்காட்டிய செய்யுள்களிரண்டும் இன்சுவை பயப்பனவாகும். 'குடிஞை சுட்டுக்குவி; குத்திப்புதை' என்று பொருள்பட ஒலிக்குமென்று கூறுகின்றார். இருப்பையின் குழை அழலை கைந்தாற்போல விளங்குகின்றன என்கின்றார். கணவனைப் பிரிந்த மகளிர் சுவரில் கோடிட்டு நாளெண்ணும் வழக்கினையும் பல்லி சகுனங் கேட்கும் மரபினையும் வருணிக்கின்றார்.

94. போந்தைப் பசலையார். (110):—

தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்பதாக இவரியற்றிய பாடல் இனிமையினும் இனிமை பயவாநின்றது. புகார்த்தெய்வம் இவராற் கூறப்பெற்றுள்ளது.

95. மதுரை அளக்கர் ஞாழார்மகனார் மள்ளனார். (33 ; 144 ; 174 ; 314 ; 344 ; 358):—

இவர் பெயர் மதுரை அளக்கர் ஞாழார்மகனார் அம்மள்ளனார் என்றும், அம்மள்ளனார் என்றும் காணப்படுகின்றது. இவர் புறத்தில் (388) பாண்டியன் மறவனை சிறுகுடிகிழான் பண்ணனைப் புகழ்ந்து பாடியுள்ளார். அகத்தில் வானவனது கொல்லியைப்புகழ்ந்துள்ளார் (அகம் 33). நற்றிணையில் இவர் இயற்றியனவாக மூன்று பாடல்கள் கிடைக்கின்றன.

96. மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனார். (56 ; 124 ; 230 ; 254 ; 272 ; 302.)

அறுவைவாணிகன் என்பது வஸ்திர வியாபாரி என்று பொருள்படும். இவர் வணிகர் மரபினர் (தொல். பொருள். மரபு. 74). திருவள்ளுவர் குறளைச் சிறப்பித்துப் பாடினருள் இவரும் ஒருவர்(வள்.மா. 35). பாலைத்திணையொழிய ஏனையவெல்லாத் திணையையும் புனைந்து இவ்வகத்தில் இவர் பாடியுள்ளார். படுத்தயானை முதுகினைக் காற்றிலசையும் வஞ்சித்தாறு தடவும் என்பர் (அகம் 302).

97. **மதுரை ஆசிரியர்நல்லந்துவனார்.** (43):—

ஆசிரியர் எனவே, இவரை அந்தணராகக் கொள்ளலாகும். அந்துவன் என்பது இவரியற்பெயர். இவர் மதுரை மருதனிள நாகனாராற் புகழப்பெற்றவர். பரிபாடலில்இவர் முருகக் கடவுளைப் புகழ்ந்து பாடியுள்ளார் (6 ; 8 ; 11 ; 20). கலித்தொகையில் கடவுள் வாழ்த்தையும், நெய்தற்கலியையும் பாடி, அத்தொகையைக் கோத்தனர். இதனை "நல்லந் துவனசான்............வாழ்த்தொடு கொங்காங் கலியினையே, கூட்டினான் ஞாலத்தோர்க் கு." என்ற பாடலால் அறியலாம். திருக்குறளைப் புகழ்ந்து பாடியுள்ளார் (வள்-மா. 18).

98. **மதுரை இளங்கௌசிகனார்.** (381)·—

கௌசிகனார் என்றமையாலே கௌசிக கோத்திரத்து வந்த அந்தணர் இவர் எனக் கொள்ளலாகும். இவர் வடுகரது விற்றிறத்தையும்,வானவன் அரணழிக்கும் சிறப்பினையும் வருணித்துள்ளார்

99. **மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன்கூத்தன்.** (102; 348):—

சேந்தன் என்பது இவர்தந்தைபெயர் ; கூத்தன் என்றமையால் இவர் கூத்தாடுவதில் வல்லுநராகக் கருதப்படுகிறார். இவர் பாடியன வெல்லாம் குறிஞ்சித்திணைப்பாடலே யாகும். திணைமேயவந்த யானை கொடிச்சி பாடிய பாட்டைக்கேட்டுத் திணையைக்கவராது உறங்குமென்று கூறுவதனோடு, மூங்கிற் குழாயிலுள்ள பாம்பு விடம்போலக் கடுப்புடைய தோப்பிக் கள்ளை மலைத் தெய்வத்திற்கு நிவேதித்துவிட்டு, பின்பு அதனை எல்லாரும் குடிக்கும் மலைநாட்டார் வழக்கினையுங் கூறுகின்றார்.

100. **மதுரை ஈழத்துப் பூதன்றேவனார்** (88 ; 231 ; 307):—

ஈழத்தினின்றும் வந்து மதுரையிற்றங்கிய பூதன் மகனாகிய தேவனாரென இத்தொடர் பொருள்படும். திணைக்கதிருண்ண வரும் பன்றி பல்லிச் சகுனம் பார்த்துவரும் என்று கூறுவது மிகுதியும் வியப்புடையதாகும். வண்டோசையை யாழிசையென்று அசுணம் ஆராயும் என்று கூறுகின்றார். பசும்பூட் பாண்டியன் வெற்றிச் சிறப்பினையும் கூடலினது பெருமையினையும் புகழ்ந்துள்ளார்.

101. மதுரை எழுத்தாளனர். (84):—

இவர்பாடியது முல்லைத் திணைப்பாடலாகும். தலைமகன் பாசறை யிருந்து சொல்லுவதாக இவரியற்றிய பாடல் மிகச்சுவை யுடையதாய்க் காணப்படுகின்றது.

101. மதுரை எழுத்தாளன் சேந்தன்பூதனர். (207):—

இவர் மேற்சொன்னவர் தாமோ அன்றி வேறோ ; ஒன்றும் விளங்கவில்லை. சேந்தன் என்பது இவர் தந்தைபெயர். பூதனர் என்பது இவரியற்பெயர். கழுதைமேல் உப்புப் பொதி யேற்றிப் போகும் உமணர் வழக்கினையும், அவர் தாம் புறப்படும் முன்னே புள் நிமித்தம் பார்த்துக்கொண்டு புறப்படுவதனையும் கூறுகின்றார். மகட்போக்கியதாய் கூறுவதாக இவர் இயற்றிய பாடல் மிக்க சுவை தருவதாகும்.

103. மதுரைக் கண்ணத்தனர். (360) .—

இவர், செவ்வானம் படிந்த மேல்கடல், சங்கரநாராயணர் அவதாரம்போன்றுளதென்று வருணிப்பது அறிஞர் யாவர்க்கும் மகிழ்ச்சி த்ருவதாம். இவர் நெய்தற்றிணையை மிகச் சுவைபடப் பாடியுள்ளார்.

104. மதுரைக் கணக்காயனர். (27 ; 338 ; 342) :—

கணக்காயனரென்பது ஒத்துரைப்போர், உவாத்தியாயர் எனப் பொருள்படும். இவர் ஊர் மதுரையாகும். இவர் அக்காலத் துப் பரந்த புகழுடைய சிறந்த பள்ளிக்கூட உவாத்தியாயரா யிருந்தனர்போலும். குறுந்தொகையில் (304) 'கணக்காயன் தத் தன் என்றிருத்தலால், இவர் இயற்பெயர் தத்தனென்று ஒருவாறு கொள்ளலாகும். இவர் நக்கீரனரது தந்தையும் கீரங்கொற்றனரது பாட்டனுருமாவர். இவர் வேங்கடத்தாசர் பாண்டியர்க்குத் திறை யாக யானைகளைத் தருவதனையும், கொற்கைப்பெருந்துறை முத் தின் சிறப்பையும், பசும்பூட்பாண்டியனது செங்கோல், வெற் றிப் பிரதாபமிவற்றினையும், பொறையனது கொல்லிமலையினையும், சோழரது பாக்கப்பெருந்துறையினையும் சிறப்பித்துக் கூறுவ தோடு, தென்னன் ஒருவன் தொடாவண்ணம் அருவிபாயும் மலைக் குகையில் மறைந்துகொண்ட சில வரையரமகளிரது செய்தியை யும் விரிததுள்ளார்.

105. **மதுரைக் கவுணியன் பூதத்தனார்.** (74):—

கவுணியன் என்றமை யானே, இவர் கவுண்டின்ய கோத்திரத்துப் பிறந்த அந்தணராவர். பூதத்தனார் என்பதிவர் இயற்பெயர். இவர்பாடிய பாடல் முல்லைத் திணைக்குரியதாகும்.

106. **மதுரைக் கள்ளிற்கடையத்தன் வெண்ணாகனார்** (170 :—

நாகனார் என்பது இவர் இயற்பெயர். அத்தன் இவரது தந்தையின் பெயர். இவர் அலவனைத் தலைவி தூதுவிடுவதாகப் பாடல் செய்துள்ளார். புறத்தில், "கள்ளின்வாழ்த்திக் கள்ளின் வாழ்த்தி" என்ற 316 ஆம் செய்யுளைப் பாடியுள்ளார்.

107 **மதுரைக் கூத்தனார்.** (334): —

இவர் கூத்து ஆடுதலில் வல்லார் போலும்.இவர் வீரமுரசத் திணைச்சிறபித்துள்ளார்.

108. **மதுரைக்காஞ்சிப்புலவர்** (89):—

பத்துப்பாட்டுள் மதுரைக்காஞ்சி பாடிய சிறப்பு நோக்கி இவர் இவ்வாறு கூறப்பெற்றார் என்பர். மாங்குடி மருதனார் எனவும் இவர் பெயர் வழங்கும். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் முதலியோரை இவர் புகழ்ந்துள்ளார். அகத்தில் இவர் மகட்போக்கிய தாய் கூற்றாகப் பாலையை வருணிப்பது இன்சுவை பயப்பதாகும். இவர் வேளாண்வருணத்தினர்.

109. **மதுரைக் காமக்கணி நப்பாலத்தனார்** (204):—

பாலத்தன் என்பது இவர் இயற்பெயர். ந என்பது சிறப்புப் பொருளுணர்த்தும் இடைச்சொல். இவர் வழுதியின் வெற்றிச் சிறப்பினையும், வாணன் சிறுகுடியினையும் பாராட்டிக் கூறியுள்ளார்.

110, **மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார்** (53 ; 134 ; 229 ; 306 ; 320):—

கூலம், எள்ளுக் கொள்ளு முதலிய தானியங்களாகும். வாணிகன், இவற்றை விற்கும் வியாபாரி. சீத்தலைச்சாத்தன் என்பது உறுப்புப்பற்றி வந்த பெயர் என்பர் சேனாவரையர் (தொல். சொல். 174). இவர் சாத்தன் என்னும் இயற்பெயருடையவராய், மதுரையில் நவதானியங்கள் விற்று வந்தவராவர் மணிமே

கலை யென்னும் நூலை இயற்றியவர். பௌத்தமதத்தில் சிறந்த பயிற்சியுடையவர். நடுகல்லின் நிழலையே இனிய நிழலெனக் கருதிச் செந்நாய் வதியும் எனச் சுரத்தின் கொடுமை கூறுகின்றார். (அகம். 53). திருக்குறளைச் சிறப்பித்துப் பாடியுள்ளார் (வள். மா. 10).

111. மதுரைச் செங்கண்ணனார். (39):—

சிவந்த கண்ணுடைமையால் இவர் செங்கண்ணனார் எனப்பட்டனர் போலும். பொருண்முற்றிய தலைமகன் தலைவியிடத்துக் கூறுவதாக இவர் கூறும் பாடல் மிக்க இனிமை பயப்பதாகும்.

112. மதுரைத் தத்தங்கண்ணனார். (335):—

தத்தன் என்பது இவரது தந்தை பெயர். கண்ணன் என்பது இவரியற் பெயர். செழியனது கூடலை இவர் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

113. மதுரைத் தமிழ்க்கூத்தன் கடுவன்மள்ளனார். (70;256;354):—

ஆரியக் கூத்து தமிழ்க்கூத்து என்னும் இருவகைக் கூத்துள் தமிழ்க்கூத்து ஆடுபவர் இவர். கடுவன் என்பது ஓர் ஊர். மள்ளன் இவரதியற் பெயர். தனுஷ் கோடிக்கரையில் இராமபிரான் மந்திராலோசனை செய்தகாலத்து, ஓராலமரத்திற் புட்கள் மிக ஒலித்து ஆலோசனைக்கு இடையூறு செய்ய, அவ்வொலியை அவர் அவித்த கதையினைக் கூறியுள்ளார் (அகம். 70). கள்ளூரிலுள்ள ஒருத்தியைக் கற்பழித்த ஒருவனை அவ்வூர் அவையத்தார் சாட்சிகளாற் குற்றவாளியென்று கண்டு, அவனை நீற்றிலிட்ட கதையினையுங் கூறினர்.

114. மதுரைத் தமிழ்க்கூத்தன் நாகன்தேவனார். (164):—

இவரும்தமிழ்க் கூத்து ஆடுகின்றவரே. நாகன் என்பது இவர் தந்தைபெயர். தேவன்என்பது இவரியற் பெயர். இவர் முல்லையைப் புனைந்து பாடியுள்ளார்.

115. மதுரை நல்வெள்ளியார். (32).—

இவர் பெண்பாற் புலவர். வெள்ளியார் என்பது இவரியற் பெயர். இவர்பாட்டிற்கு நச்சினார்க்கினியர் விளக்கமான உரை கூறியுள்ளார் (தொல். பொருள். 519).

116. மதுரைப் பண்டவாணிக னிளந்தேவனர். (58; 268; 328):—

பண்டம் - பலசரக்கு பண்டவாணிகன் - பலசரக்கு வியாபாரி. இவர்பாடியன வெல்லாம் குறிஞ்சித்திணைப் பாடல்களாகும்.

117. மதுரைப் பாலாசிரியர் நப்பாலனர். (172):—

இவர் கானவன்கை இரும்புவடித்தது போலும் என்று கூறுவதனேடு, அக்கானவன் யானையைக் கொன்று வெண்கோடு பெறுவதனையும் வருணிக்கிறர்.

118. மதுரைப் பாலாசிரியர் நற்றமனர். (92):—

தாமன் என்றது இவர் இயற்பெயர். தலைமகனைத் தோழி பகற்குறிநேர்ந்தவாய்பாட்டால் வரைவுகடாயதாக இவர் செய்த செய்யுள் மிக்க வியப்பினைப் பயப்பதொன்றாகும். திருவள்ளுவமாலையில் மதுரைப் பாலாசிரியர் என்றொருவர் காணப்படுகிறர். இவரும் அவரும் ஒருவரோ வேறோ தெரியவில்லை.

116. மதுரைப் புல்லங்கண்ணனர். (161):—

புல்லன் இவரது தந்தைபெயர். கண்ணன் இவரியற் பெயர். பாலையைப் புனைந்து இவர் பாடியுள்ளார்.

120. மதுரைப் பேராலவாயார். (87; 298.):—

பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு தன்கணவனை இழந்தபோது தீப்பாய அவளைக்கண்டு இவர் வியந்து பாடினர் (புறம் 247). கொற்கைப்பொருநனை செழியனையும், அவனது கூடல் நகரையும், வையையையும் புகழ்ந்துள்ளார் (296).

121. மதுரைப் பொன்செய்கொல்லன் வெண்ணகனர். (363):—

பொன் செய்கொல்லன் எனவே, இவர் தட்டார் ஆவர். இவர் பாலைநிலத்தில் நெல்லிக்காய் உதிர்வது பொலன்செய்காசு உதிர்வதுபோலு மென்று வருணித்துள்ளார்.

122. மதுரைப் போத்தனர். (75):—

நற்றிணையில் போதனர் என்றுஒருவர் காணப்படுகிறர். இவரும் அவரும் ஒருவரோ வேறோ தெரியவில்லை. தலைமகன் பிரிவின்கண் தோழி தலைவியைத்தேற்றுவதாகக் கூறிய இவர் பாடல் இனிய சுவையை நல்குவதொன்றாகும்.

123. மதுரை மருதங்கிழார்மகனார் பெருங்கண்ணனார். (247;364):

இவர் வேளாளர். ஆடு களப்பறையைப்போலத் தேரை ஒலிப்பன வென்றும், பொன்னாபரணத்தைத் தொங்கவிட்டாலன்ன கொன்றைப் பூங்கொத்து மலர்ந்து விளங்குகின்றன வென்றும் இவர் அழகிய உவமை கூறியுள்ளார். காடி இருப்பைப் பூவினையும் புற்றாம்பழஞ்சோற்றினையும் உண்டலை வருணித்துள்ளார்.

124. மதுரை மருதனிளநாகனார் (34; 59; 77; 90; 103; 121; 131; 184; 193; 206; 220; 245; 255, 269; 283; 297; 312; 343; 358; 365; 368; 380; 389):—

இவர் கலித்தொகையில் மருதக் கலிப்பாட்டு 35ம் பாடிய ஆசிரியராவர். இதனை "மருதனிள நாகன் மருதம்" என்றதனால் அறியலாம். அத்தொகையைக் கோத்த நல்லந்துவனாரிடத்துப் பெருமதிப்புடையவர். தொழுநை (யமுனை) யாற்றின் கரையில் கண்ணபிரான் கோபியரது வஸ்திரத்தைப் பறித்துக்கொண்டு குருந்தமர மேறிய கதையினைக் கூறியுள்ளார் (அகம். 56).

கொங்கரது உள்ளிவிழாவினையும், கழுவுளது காமூராங்கண் பூதந் தந்த வேங்கையினையும், வாணன் சிறுகுடியினையும், கடவுளரெல்லாம் பலிபெறுதற்கிடமானதும் கோசரது சிறந்த நியமத்தை (கடைத்தெருவைக்) கொண்டுள்ளதுமான செல்லூரிலே பரசுராமன் வேள்விசெய்த வரலாற்றினையும், வேளிரது வீரைமுன்றுறையிலே உப்புக் குவடுமிக்குள்ளன வென்பதனையும், ஊணூர், சாய்க்கானம் முதலிய வற்றினையும் புகழ்ந்தனர். மற்றும் இவர் எருமையின் வளைந்த கொம்பு பேடிப் பெண்ணின் ஆடுகைபோன்றுள்ள தென்றும், இரலையின் திரிமருப்புக் கானவன் கவைபொறுத்தாற் போன்றுளதென்றும் வருணித்துள்ளார். குடவோலையெடுத்துப் பிரமாணம்வாங்கும் வழக்கினைக் கூறுவர். இறையனார் களவியலுக்கு இவருமோர் உரையியற்ற, அதனையும் உருத்திர சன்மர் ஒருவாறு அங்கீகரித்தனரென்று தெரிகிறது. இவர் ஐந்துதிணையையும் புனைந்துபாட வல்ல ஆற்றல் படைத்தவர்.

125. மதுரை.........மள்ளனார் (244):—

இவர் மதுரைஅளக்கர் ஞாழார்மகனார் மள்ளனாரோ, மதுரைத் தமிழ்க்கூத்தன் கடுவன் மள்ளனாரோ, அன்றி இருவரினும் வேறான

ஒருவரோ யாதும் விளங்கவில்லை. இவர் பாடியது முல்லைத் திணைப் பாடலாகும்.

126. **மருங்கூர்கிழார் பெருங்கண்ணனார்** (80):—

இவர் வேளாளர். மருங்கூர் என்னும் ஓர் ஊர் நாகபட்டினத்துக் கருகிலுள்ளது. "பசும்பூண்வழுதி மருங்கை" என (நற். 358) ஒரு மருங்கூர் கூறப்படுதலால், பாண்டி நாட்டகத்தும் மருங்கூர் ஒன்றுளதென்த் தெரிகிறது. இரவுக்குறி வந்த தலைமகற்குத் தோழி பகற்குறி நேர்வதாக இவர் பாடல் செய்துள்ளார்.

127. **மருங்கூர்ப்பாகைச் சாத்தன்பூதனார்** (327):—

மருங்கூர்ப்பாகை என்பது ஓர் ஊர்போலும். சாத்தன் இவர் தந்தைபெயர். இவரியற்பெயர் பூதனென்பது. அத்தத்திற் செல்லுவோரை வேடர் அம்புவிடுத்துக் கொன்றுவிட்டுத் தமது அம்பு சிதைந்தமைக்கு வருந்துவதல்லது இறந்தவர்க்கு இரங்கார் என அவரது கொடுமையைக் கூறுகின்றார். பாம்பின் தோல் காற்றில் நிவப்பது மலையருவி ஒழுகுவதனோ டொக்குமென்கின்றார்.

128. **மருதம்பாடிய இளங்கடுங்கோ** (96 ; 176.)— :

இவர் பாலைபாடிய பெருங்கடுங்கோவின் சகோதரராகலாமென்றாகிக்கப்படுகிறார். அங்ஙனமாயின் இவர் சேரர் மரபினராவர். இவர் தாமரையின் தண்டு கழைபோன்று பருத்து உள்ளே தூம்புடைத்தாயிராநின்ற தென்றும், இலைகளிற்றுச் செவிபோன்றுளதென்றும், முகை கழு நிவந்தது போன்றுளதென்றும், மலர் மகளிர் முறுவன்முகம்போன்றிராநின்ற தென்றும் வருணிப்பது மன்றி, வேம்பு நனைபோல ஞெண்டின் கண் விளங்குகின்ற தென்றும் உவமை கூறியுள்ளார் (அகம். 176). அகுதை யென்ற வனப்பு மிக்க ஒருத்தியின் தந்தையாகிய சோழர் சேரபாண்டியரைப் பருவூரில் தாக்கி முறியடித்ததனைக் கூறியுள்ளார்.

129. **மாமூலனார்** (1 ; 16 ; 31 ; 55 ; 61 ; 65 ; 91 ; 97 ; 101 ; 115 ; 127 ; 187 ; 197 ; 201 ; 211 ; 233 ; 251 , 265 ; 281 ; 295 ; 331 ; 325 ; 341 ; 347 ; 349 ; 359 ; 393.):—

இவர் அந்தணர் ; முக்காலமும் உணர்ந்த யோகியாவார் (தொல். பொருள். 75-ஆம் சூ. நச்.). இவர் அகத்திற் பாடியனவெல்லாம் பாலைத்திணைக்குரிய பாடல்களே

ஆதும். இவராற் பாடப்பெற்றோர் பலராவர். இவர் ஆவிநெடு வேளையும் அவனது பொதினிநகரையும் பாடியது (அகம். 1; 61); தூளுநாட்டையும் நன்னன் பாழியையும் பாடியது (அகம். 15); கரிகால் வளவனுக்கும் சேரலாதனுக்கும் வெண்ணியில் நடந்தபோரில் சேரலாதன் புறப்புண்பட்டானாக, அதற்கு அவன் நாணி வடக்கிருக்கத் தலைப்படலும், சான்றோர் பலர் அவனுடன் வடக்கிருந்தனர் என்ற கதையினைக் கூறியது அகம். 55.); உதியஞ் சேரலது கொடைத்திறனைப் பாராட்டியது (அகம். 65); குடநாட்டையும் மழவரது களவுழவையுங் குட்டுவனையும் கூறியது (அகம். 91); நன்னன் வேண்மானது வியலூரைப் புகழ்ந்தது (அகம். 97); மழவரது தலைமயிர் வருணனையையும், அவர் இருமல் தீர்க்கும் மருந்தை வாயிற் போகட்டுக்கொண்டு நிரைகவர்தற் சிறப்பினையும் கூறியது (அகம். 101); எருமையினது குடநாட்டையும், எவ்வி செருவில் வீழ்ந்தமையையும் கூறியது (அகம். 115.); சேரலாதன் கடலோட்டியதனையும் கடம்பெறிந்ததனையும் கூறியது (அகம் 347.); அவன் இமயத்துவிற்பொறித்ததனையும், மாந்தை முற்றத்தில் ஒன்னார் பணிந்துதந்த பொன்கலத்தினோடு வயிரம் முதலியவற்றையும் ஒரு பொற்பாவையையும் குவித்துவிட்டு உலகத்தைத் துறந்த விருத்தாந்தத்தையும் வருணித்தது (அகம். 127; 347); மழவரதுபூந்தொடைவிழவினைச் சிறப்பித்தது (அகம். 187.); கண்ணனெழினியினது போர்த்திறனைப் புகழ்ந்தது (அகம். 197); பாண்டியரது கொற்கையில் வலம்புரி மூழ்குதலையும், சோழரது நன்னாட்டையும் புகழ்ந்தது (அகம். 201); வேங்கடத்தையும், மத்தி எழினி பல்லைப்பிடுங்கி வெண்மணிவாயிற் கதவில் அழுத்தியதனையும் விரித்தது (அகம், 211.); உதியஞ் சேரல்பெருஞ்சோறு கொடுத்த கதையினைக்கூறியது (அகம். 3 233 ~~280~~), நந்தன் வெறுக்கையையும், கோசர் பொதியிலையும், மோகூர் பணியாமையிற் பகைத்துவந்த மோரியர் தேருருள் குறைத்த வரலாற்றினையும் விரித்தது (அகம். 251.); இமயவரையையும், "நந்தர் பாடலிக்குழீஇ நீர்முதற் கரந்த நிதிய"த்தினையும், வேங்கடத்தையும் கூறியது (அகம். 265); மோரியரது தென்றிசைப் பிரவேசங் கூறியது (அகம். 281.); புல்லிகுன்றத்தினையும், வடுகர் தேயத்தினையும் கூறியது (அகம் 295;311); வளவனால் அதிகன் பிணிக்கப்பட்டதும், பாணன்நாட்டை வருணித்தும் (அகம். 325.); திதியன் வேளிரொடு பொருததனைக் கூறியது (அகம். 331.); நன்ன

னது ஏழிற்குன்றத்தைப் புகழ்ந்தது (அகம். 349.); வானவரம்பன் வெளியத்தையும் புல்லிமலையையும் புகழ்ந்தது (அகம். 359.); அப் புல்லி வேங்கடத்தைப் புகழ்ந்தது (அகம். 393.). மற்றுமிவர் கூறிய உவமைகளும், உள்ளுறை இறைச்சி முதலியனவும் மிகப்பல. விரிப்பிற் பெருகுமென்று அஞ்சி விடுக்கப்பட்டன.

130. **மாற்றூர்கிழார்மகனார் கொற்றங்கொற்றனார் (54):—**

இவர் 'வேளாளர். இவர் பண்ணையும் சிறுகுடியையும் பாராட்டிக் கூறியுள்ளார்.

131. **மாறோக்கத்துக் காமக்கண்ணி நப்பாலத்தனார் (377):—**

மாறோக்கம் கொற்கையைச் சூழ்ந்ததொரு நாடு. பாலத்தன் என்பது இவர் இயற்பெயர். அருஞ்சுரத்திலே மறவர் எறும்பு சேகரித்துவைத்திருக்கும் தானியத்தை எடுத்து உண்பதனைக் கூறுவதனோடு அவர் நிரை கவர்தலையும் வருணித்துள்ளார். மாறோகம் என்றும் பாடம்.

132. **முடங்கிக்கிடந்த நெடுஞ்சேரலாதன் (30):—**

முடங்கிக் கிடந்த என்றமையால் இவர் நடக்க வியலாது கிடந்தனர் எனத் தெரிகிறது. சேரலாதன் எனவே சேரர் குடியினர் என்பது வெளிப்படை. இவர் நெய்தலைப் புனைந்து பாடியுள்ளார்.

133. **முள்ளியூர்ப் பூதியார் (173):—**

இவர் பெயர் முன்னியூர் வழுதியார் எனவும் காணப்படும். இவர், மூங்கிலினின்றும் தெறித்து விழும் முத்தம் கழங்குபோல உருளுகின்றதென்று வருணிக்கின்றார். நன்னனது பொன்விளை சுரங்களை யுடைய மலையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

134. **மோசிக்கரையனார். (260).—**

மோசிக்கரை யென்பது ஓர் ஊர். இவர் நெய்தலைப் புனைந்து பாடியுள்ளார். மாலைப் பொழுதை இவர் வருணிப்பது சுவையுடைத்தாகும்.

135. **வடமவண்ணக்கன் பேரிசாத்தனார். (38; 214; 242 268; 305.)**

வண்ணக்கன்—நாணய 'பரிசோதகன். வடமவண்ணக்கன் எனவே வடமனாகிய நாணயசோதகன் எனப்பொருள்படும்.' இவர்

பேரி சாத்தனார் எனவும் கூறப்படுவர். இவர் குறிஞ்சியையும் முல்லையையும் பாலையையும் புனைந்து பாடியுள்ளார்.

136. **வடமோதங்கிழார்** (317):—

இவர் வேளாளர். கோங்கலரிற் குரவ மலர் உதிர்வது பொன் தராசுத் தட்டில் வெள்ளித் துண்டு சொரிவது போலுமென்று வருணிக்கின்றார்.

137. **வண்ணப்புறக் கந்தரத்தனார்** (49):—

இவர் இயற் பெயர் கந்தரத்தன் என்பது. "வண்ணப்புறவின் செங்காற் சேவல்" (நற். 71) என்று இவர் கூறிய தொடைச்சிறப்பு நோக்கி வண்ணப்புறக்கந்தரத்தனார் எனப்பட்டார் என்பர். மகட்போக்கிய செவிலித்தாய் இரங்குவதாக இவரியற்றிய பாடல் இன்சுவை பயப்பதொன்றாகும்.

138. **விற்றூற்று மூதெயினனார்** (37 ; 136 ; 288):—

விற்றூறு என்பது ஓர் ஊர். எயினன் வேடன். இவர் முதிய வேடர் மரபினர். மகளிர் மாங்காட்டை வருணித்துப் பாடியுள்ளார். இவர் பாடிய அகம் 136 ஆம் பாட்டினைக் களவின்வழி நிகழ்ந்த கற்புக்கு உதாரணமாகக் காட்டினர் நச். (தொல், பொருள் 145).

139. **வீரைவேளியன் தித்தனார்** (188):—

தித்தன் என்பது இவர் இயற்பெயர். வீரை என்பது ஓர் ஊர் அகம் (206). மின்னல் ஒளிர்வது அரசர் உறைகழித்தவாள் மின்னுவது போலுமென்று வருணிக்கிறார். பாடப்பெற்றோரில் இவர் ஒருவராவர்.

140. **வெள்ளாடியனார்** (29):—

புலி, தான் அடித்த களிறு இடப்புறம்வீழின் மிசையாது என்று இவர் அதன் மானத்தினைக் கூறுகின்றார். தலைமகன், புலந்து கூறிய தலைமகட்குச் சமாதானஞ் சொல்லுவதாக இவரியற்றிய பாடல் மிக வியப்புடையதாகும்.

141. **வெள்ளி வீதியார்** (45 ; 362):—

இவர் பெண்பாற் புலவர். இவர் தமது கணவனைத் தேடிக் கொண்டுபோன செய்தியை ஔவையார் எடுத்துக்கூறியிருக்கின்றார்.

(அகம். 147.). ஆதிமந்தி தன் கணவனைத்தேடிச்சென்ற செய்தியை இவர் எடுத்துக் கூறியுள்ளார் (அகம். 45.). அன்னி, திதியனது புன்னையைக் குறுக்கைப் பறந்தலையில் குறைத்துப் பெரும்போர் நடத்தியதனையும், வேலாற் கடலோட்டிய வானவரம்பனது அரணழிக்கும் ஆற்றலையும் பாராட்டிக் கூறியுள்ளார். புலிநகத்திற்கு முருக்கினரும்பை உவமை கூறியுள்ளார் (அகம். 362) திருக்குறளையும் சிறப்பித்துப் பாடினர் (வள். மா. 23).

142. **வெறிபாடிய காமக்கண்ணியார்** (22 ; 98.):—

இவர் வெறியாடலைப் பாராட்டி வருணித்துள்ளமையால் "வெறிபாடிய" என்ற அடை கொடுக்கப்பெற்றார். புறத்தில் இவர்பாடியனவாக இரண்டு பாடல்கள் காணப்படுகின்றன (புறம் 27 ; 302.).

143. **வேம்பற்றூர்க் குமரனார்** (157.)—

குமரன் என்பது இவரியற் பெயர். வேம்பற்றூர் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ளதோர் ஊர். அருஞ்சுரத்தில் வேடர்கள் கள்ளை மிகுதியாகக் குடித்துவிட்டு வேட்டைவெறிகொண்டவர்களாய் வழியே போவாரைக் கொல்லுங் கொடுமையினை வருணித்துள்ளார். வல்லாண் முல்லைத்துறையில் இவர் பாடியபாடல் புறத்தில் (317) காணப்படுகின்றது.

**ஆசிரியர் பெயர் காணப்படாத பாடல்கள்:—** 114 ; 117 ; 165.

## தொகுத்தோர் வரலாறு

### மதுரை உப்பூரிகுடிகிழார்மகனுவார் உருத்திரசர்மர்

இவர் முருகக் கடவுளுடைய அவதாரம். ஒரு சாபத்தினால் மூங்கையாய் வைசிய வருணத்தில் உப்பூரிகுடிகிழார்க்கு மகனாக அவதரித்தனர். இறையனா ரியற்றிய களவியல் என்ற அகப் பொரு ளிலக்கணத்திற்கு நக்கீரர் இயற்றிய உரையைக் கேட்டுப் பதந்தொறும் பதந்தொறும் மெய்சிலிர்த்து ஆனந்தக்கண்ணீர் உகுத்து, அதனை மெய்யுரையென்று அறிவித்தனர். மதுரை மருதனிளநாகனா ரியற்றிய உரைக்கும் ஓரோவிடத்துக் கண்ணீர் உகுத்தனர் (இறை. களவு. பாயிரவுரை.). இவருக்குக் கூர்மையான செவியுணர்வுண்டு. இஃது 'இவரைப்பற்றிய இந்நூற்பாயிரத்தில் வந்துள்ள "தோலாச்செவியான்" என்ற அடையினால் அறியற்பாற்று. இவரைக்கொண்டு உக்கிரப் பெருவழுதியார் இவ்வகநானூற்றினைத் தொகுப்பித்தார்.

---

## தொகுப்பித்தோர் வரலாறு

### பாண்டியன் உக்கிரப்பெருவழுதியார்

இவர் பாண்டியன் கானப்பேர் எயில்தந்த உக்கிரப் பெருவழுதியாராவர். இவர் வரலாற்றைப் பாடினோர் வரிசையிற் கண்டு கொள்க.

PRINTED AT THE COMMERCIAL PRESS, TRIPLICANE, MADRAS.

ஸ்ரீ:

# அரசர் முதலியோர் வரலாறு

[இவ்வரலாறு பெரும்பாலும் அகநானூறு ஸம்பந்தப்பட்டவளவே வரையப் பெற்றதாகும்.]

1. **அஃதை** (76, 113, 208) :—

இவன் சிறந்த கொடையாளி. பொருநர்க்குக் களிற்றுப் பரிசில் ஈவோன் (அகம். 76). இவன் கோசர்களால் ஒருகால் காக்கப்பெற்றான் (அகம். 113). தம் கணவனையிழந்து துன்புற்ற வேண்மகளிர் பூசலைக் களைந்தோன் (அகம். 208). இவன் அகுதை என்றும் கூறப்படுவான். இவன் மார்பில் பகைவர் சக்கராயுதம் தைத்தது என ஒருபொய் வார்த்தை பிறந்தது (புறம் 223).

2. **அகுதை** (96) :—

இவள் ஒரு சோழன் மகள். சோழர்க்கெல்லாம் இவள் மகளென் முறையாக நின்றாள் என்பர் நச்சினார்க்கினியர் (தொல். சொல். 461). இவட்குத் தந்தையாம் முறையினரான சோழர் இருபெரு வேந்தரைப் பருவூர்ப் பறந்தலையில் தாக்கிவென்று அவர் களிற்றைக் கவர்ந்தனர். இவ்வரலாற்றைக் கூறியவர் மருதம்பாடிய இளங்கடுங்கோ.

3. **அஞ்சி** (352, 372) :—

இவனது இயற்பெயர் நெடுமிடல் என்பது (பதிற். 32). அதிகன் என்றும் எழினி என்றும் இவனுக்குப் பெயர்கள் வழங்கப்பெறும் (அகம். 105, 142, 162, 211, 325). இவனுக்குக் குதிரைமலை யுரியது (அகம். 372). அஞ்சியின் ஏவலிளையர் நிரைகவர்தற் சிறப்புக் கூறப்பெற்றுள்ளது (அகம். 105, 372). இவனது வெற்பகத்தில் பசும்பூட் பாண்டியன் தன் களிறுகளைப் பரப்பினதாக (அகம் 162) அறியலாவது.

இனி எழினி என்பான் பெருவேந்தனாகிய வளவன் ஏவற்படி வாராமையால், அவ்வளவன் மறவனான மத்தி இவ்வெழினியைப் பற்றிவந்து, பல்லைப் பிடுங்கித் தன் வெண்மணிவாயிற் கதவில் அழுத்தினான் (அகம். 211, 325). அதிகனென்று ஒருவன் பாழிக்

கண்ணே மிஞிலியாற் கொல்லப்பட்டதாக அகம் 142 ஆம் பாட்டால் அறியப்படுமாயினும், அப்பாட்டில் "அதிகற் கொன்று" என்றிருப்பது "எயினற் கொன்று" என்றிருத்தல் வேண்டுமென ஊகிக்கப்படுகின்றது. (அகம். 181, 208; புறம் 230 ஆம் பாடல்களை நோக்கியறிக.) நல்லெழினி என்றொருவர் பரிபாடலில் 13 ஆம் பாடலைப் பாடியவராகக் காணப்படுகிறார். அவர் இவ்வதிகமான் நெடுமான் அஞ்சியின் மரபினைச் சார்ந்தவரெனக் கொள்ளலாம்.

4. அண்டர்மகளிர் (59) :—

இவர் தொழுனை யாற்றங்கரையிலுள்ள கோகுலத்தில் ஸ்ரீ கண்ணபிரானுடன் விளையாடிவந்த இடைப் பெண்களாவர். இவர் தேவ ஸ்திரீகளின் அம்சமாவார். இவர்கள் வஸ்திரமில்லாமல் யமுனை யாற்றில் நீர் விளையாட, அது பிழையென்றுகண்ட ஸ்ரீ கண்ணபிரான், கரையிலிருந்த அவர் ஆடைகளைக்கவர்ந்துகொண்டு குருந்தமரத்து ஏறிக்கொண்டார். அவர்கள் நாணித் தாம் செய்தது பிழையென்றுணர்ந்து தம் வஸ்திரங்களைத் தரும்படி வேண்டுமளவில், அவ்விடத்திற்குப் பலராமன் வந்தாராக, அவர் பாராவண்ணம் எல்லாரும் ஒருமிக்க மறைந்துகொள்ள ஸ்ரீ கண்ணபிரான் அக்குருந்த மரத்துக் கொம்பைத் தாழ்த்துக் கொடுத்தார். அக்கோபியர் அதில் மறைந்துகொண்டனர் என்பது வரலாறு. இவரைப் பாடினவர் மதுரை மருதனிளநாகனார்.

5. அத்தி (44) :—

இவன் சேரனுடைய படைத்தலைவரில் ஒருவன். இவனும் நன்னன் முதலியோரும் பெரும்பூட் சென்னியை எதிர்த்து, அவன் சேனபதி பழையனைக் கொன்றுவிட, அச்சென்னி சினஞ்சிறந்து கொடும்போர்செய்து சேரன்படைமுதலியான கணையனை அகப்படுத்திக் கழுமலத்தை வென்றுகொண்டான். இவனைப் பாடியவர் குடவாயிற் கீரத்தனார்.

6. அவியன் (271) :—

இப்பெயர் அவையன் எனவும் வழங்கப்படும். இவன் ஒரு கொடையாளி. இவன்மலை மேகங்களால் சூழப்பெற்றுள்ளதென்று வருணிக்கப் பெற்றுள்ளது. இவனைப் புகழ்ந்தவர் காவிரிப்பூம் பட்டினத்துச் செங்கண்ணனார்.

7. **அன்னி** (45, 126, 145) :—

இவன் திதியனுக்கு உரித்தான ஒரு புன்னைமரத்தை விரும்பி, எவ்வியென்பான் நன்மொழிகூறி அடக்கவும் அடங்கானாய் (அகம். 126), அதனை வெட்டி விட்டான் (அகம். 45: 145). உடனே திதியன் சினமூண்டு, குறுக்கைப் பறந்தலையில் அன்னியோடு போர் புரிந்து, அவனைக்கொன்று விட்டான் (அகம். 126). இவனைப் பாடியவர் வெள்ளிவீதியார், நக்கீரர், சயமனார்.

8. **அன்னிமிஞிலி** (196 ; 262):—

இவள் ஓரழகுவாய்ந்த பெண்மணி. இவள் தந்தையை ஊர்முது கோசர் கண்ணைக்களைந்து அவமானப்படுத்திவிட (அகம். 196; 262), இவள் மிகச்சினந்து அக்கோசரை அழித்து விடுவதென்று சபதஞ் செய்து, கலத்து உண்ணாமலும் வெளிய வஸ்திரம் உடாமலும் தான்கொண்ட சின்க்கோலத்தை மாற்றாமலுமிருந்து, குறும்பியனுக்கும் திதியனுக்கும் அக்கோசர்பால் பகையுண்டாகும்படி உரைத்து, அக்கோசரைக் கொல்லுவித்துச் சினந்தணிந்து, பேருவகையுமெய்தி, அத்திதியனது அழுந்தைக்கண்ணே பண்டைக் கோலத்தோடு செருக்குற்று உலாவினள் (அகம். 196). இவளைப் பாடியவர் பரணர்.

9. **ஆஅய் அண்டிரன்** (69 ; 152 ; 198):—

இவன் கடையெழுவள்ளல்களில் ஒருவன் (புறம். 158). இவன் நாட்டில் கவிரமலை உள்ளது (அகம். 198). இவன் காடுகளில் சிறந்த யானைகள் பலவுள (அகம். 152). இவனது தலையாற்றிலுள்ள மலை மிக்க வளமுடையது. இவனது படைவீரர் மாற்றரசர் அரண்களைப் பொடியாக்கும் விற்றிறம் படைத்தவர் (அகம். 69). இவனைப்பாடியவர் உமட்டூர்கிழார்மகனார் பரங்கொற்றனார்; பரணர்.

10. **ஆஅய் எயினன்** (148 ; 181 ; 208 , 396):—

இவன் சிறந்த வீரனும் கொடையாளியுமாவன் (அகம். 181). எயினன் என்றமையால், வேடர்மரபினனாவான். இவன் பாழிக்கண்ணே மிஞிலியோடு போர்தொடுத்து, அப்போரிற் கொல்லப்பெற்றான் (அகம். 396). இவனைப் பாடியவர் பரணர்.

11. **ஆட்டனத்தி** (76, 222, 236, 376, 396):—135

இவன் வஞ்சிக்கோன் ஆகிய சேர அரசன் (சிலப். வஞ்சின. அடி 11; 12). ஆட்டன் என்றமையானும், பொருநன் (அகம் 76) என்றமையானும் இவன் கூத்தாடுவதில் தேர்ச்சியுள்ளவன் என்று தெரிகிறது. சேரர்க்கு ஆடுதல் வழக்குண்மை ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் துணங்கையாடினமையால் அறியலாவது (பதிற். 52). இனி இவன் சரித்திரம் வருமாறு: கரிகால் வளவனுக்கு நல்லிசைப் புலமைவாய்ந்த (குறுந் 31) ஆதிமந்தி என்னும் பெயரிய ஒருமகள் சேரவரசனை இவ்வாட்டனத்திக்கு வாழ்க்கைப்பட்டிருந்தாள். அக் கரிகால் தன் சுற்றத்தோடு கழாஅர்ப் பெருந்துறையில் காவிரியின் புதுப்புனல் வருகையைக் கொண்டாடி விழாச்செய்ய, அதற்கு வந்திருந்த அவ்வத்தி அப்புனலிற் பலவகையாகக் கூத்து ஆடி விளையாடக்காவிரி அதனைக் காதலித்து அவனை இழுத்துக்கொண்டுபோய்க் கடலில் ஒளித்து விட்டது. அஃது அறியாத ஆதிமந்தி கலுழ்ந்த கண்ணளாய்ப் பலவிடங்களிலும் தேடி உழன்று, கடைசியாகக் கடற்கரைக்குவர, ஆங்கு மருதி என்ற ஒருத்தி அவ்வாட்டனத்தியை அவ்வாதிமந்திக்குக் காட்ட, அவள் மிகமகிழ்ந்து கணவனோடு தன்னூடு சென்றடைந்தாள் என்பதாம். இவன் அத்தியென்றும் கூறப்படுவான். இவ்வரலாற்றை விரித்தவர் பரணர்.

12. **ஆதனெழினி** (216):—

இவன் செல்லிக்கோமானாவான் (அகம் 216). இவனைப்பாடியவர் ஐயூர் முடவனார். வாட்டாற்று எழினியாதன் என்பான் ஒருவன் புறத்தில் (396) காணப்படுகின்றான். இவ்விருவரும் ஒருவரோ வேறோ தெரியவில்லை.

13. **ஆதிமந்தி** (45; 76; 135; 222; 236; 396):—376

இவள் கரிகால்வளவனது மகள். வஞ்சிக்கோவாகிய ஆட்டனத்திக்கு வாழ்க்கைப்பட்டாள். ஒருகால் இவள் தன்கணவனோடு கழார்ப்பெருந்துறையில் நடந்த காவிரிப்புதுப்புனல் விழவிற்கு வந்திருந்தபோது, அப்புதுப் புனலிற் "கல்லாயானைக்கடிபுனல் கற்றென" அவ்வத்தி நர்த்தனஞ்செய்து நீராடினனாக, அவ்வழகைக்கண்டு மோகித்துக் காவிரி அவனை இழுத்துக்கொண்டுபோய்க் கடலில் ஒளித்துவிட்டது. அஃதறியாத ஆதிமந்தி பேதுற்றுத் திசைகள் தோறும் அவனைத்தேடிக்கொண்டு, கண்டாரனைவரையும், "என்

கணவன், 'கச்சினன் கழலினன், தேன்தார் மார்பினன், வகையமைப் பொலிந்த வனப்பமை தெரியற், சுரியலம் பொருநன்.' அவனைக் கண்டீரோ!" என விசாரித்தும், ஒருவரும் சொல்லாமையால், காவிரி சென்றவழியே சென்று, கடலை அடைந்து அங்குத் தேட, மருதியெனபாள் அவனை அவளுக்குக் காட்ட, அவள் கணவனைத் தழுவிக்கொண்டு தன்னூடுவந்தடைந்தாள். இவள் நல்லிசைப் புலமைவாய்ந்தவள் (குறிந். 31). வெள்ளிவீதியாரால் புகழ்ந்து பாடப்பெற்றவள் (அகம். 45). இவள் கதையை விரித்துக்கூறியவர் பரணர்.

14. ஆரியபபோருநன் (386) :—

இவன் ஆரிய நாட்டிலுள்ளானாகிய சிறந்த மல்லன். இவனுக்கும் பாணனுக்கும் மற்போருண்டாக, அப்போரில் பாணன் இவனால் தோல்வியுற அதைக்கண்டு, கணையன்நாணி மறைந்தான் இவனைப்பாடியவர் பரணர்.

15. ஆரியர் (276; 336; 396; 398):—

இவர் வடதிசைக்கண்ணே வாழும் ஒரு பெருங் குழுவினர். இவருக்கும் தமிழ் அரசர்க்கும் பலகாலும் போர்விளைந்து வந்தது (அகம். 336). ஒருகால் இவர், தமிழ்நாட்டிற் பிரவேசித்துச் சோழரோடு போர்தொடுக்க, அச்சோழரால் வல்லத்துப்புறமிளையில் இவர் படையழிந்து தோற்றனர் (அகம். 336). மற்றொருகால் பெருஞ்சேரலாதன் வடநாட்டின்மேற் படைசெலுத்திச் சென்று, அவ்வாரியரை அலறத் தாக்கி அவர் அரசரைப் பிணித்துத் தனது விற்பொறியை இமயத்துப் பொறித்து மீண்டான் (அகம். 396). இவ்வாரியர் பிடியைப் பழக்கி அவற்றைக்கொண்டு களிற்றைப் பிடிக்குந்தொழில் கற்றவர் (அகம். 276). இவருக்கு உரிய மலை இமயவரை. இவரை அகத்திற் கூறினோர் பரணர், பாவைக் கொட்டிலார், இம்மென்கீரனார்.

16. இராமன் (70):—

இவர் தசரதர் குமாரர். இவர் தம் பத்தினியைத் தேடிக்கொண்டு, சுக்கிரீவன் முதலிய வானரவீரர்களுடன் தனுஷ்கோடிக் கரைக்கு வந்து, ஆங்கு ஓராலமரத்தடியில் தங்கி, சமுத்திரத்தைக்கடந்து இலங்கைக்குப்போகும் விஷயமாக அவ்வானர வீரர்க

ளுடன் மந்திராலோசனை செய்யத் தொடங்குகையில், அவ்வாலிற் புட்கள் மிகுதியாக ஒலிக்க, அவ்வொலியை அவித்தனர் என்பது வரலாறு (அகம். 70). இதனைப் பாராட்டிக்கூறியவர் மதுரைத் தமிழ்க்கூத்தன் கடுவன்மள்ளனார்.

17. **இருங்கோவேண்மான்** (36):—

இவன் வேளிர்மரபினன் (புறம். 201); சிறந்தவீரன்; கபிலர் வேண்டவும் பாரி மகளிரை மணக்க மறுத்தவன். இவன் தலையாலங்கானப்போரில் நெடுஞ்செழியனாற் கொல்லப்பட்டான். இவனைப்பாடியுவர் நக்கீரர்.

18. **இளம்பெருஞ்சென்னி** (375):—

இளஞ்சேட் சென்னியென்றும் இவன் வழங்கப்படுவான் (புறம். 370; 378). இவன் பாழியை நூறி, ஆங்கு எதிர்த்துவந்த வடுகரைத் தலைசுவட்டினோன். இவனை அகத்திற்பாடியவர் இடையன் சேந்தன் கொற்றனார்.

19. **உதியஞ்சேரல்** (45; 65; 168; 233; 359; 389.):—

இவனுக்கு வானவரம்பன் உதியஞ்சேரல் என்றும் பெயர் வழங்கப்பெறும் (புறம். 2; அகம். 45; 359; 389). இவன் வேலாற் கடலோட்டினான் (அகம். 45). மாற்றார் அரணை அழிக்கும் சிறந்த வீரன். பிறர் நாடுகளை வென்று, தன் வசமாக்கிக்கொண்டவன். பரிசிலர்க்கு வரையாது கொடுப்பவன் (அகம். 65). இவன் தன் பிதிரர்களுக்குச் செய்யும் பிண்டக்கிரியையில் பெருஞ்சோறு கொடுத்ததனாற் பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் எனவும் (புறம். 2) அழைக்கப்படுவான். அப்பெருஞ்சோறு கொடுத்தகாலத்து, இவனது அட்டில் குழுமூரின்கண் அமைக்கப்பெற்றிருந்தது (அகம். 168). அக்குழுமூரின்கண்ணே ஆக்கள் மிகுதி. புறத்தில் (2) "ஈரைம் பதின்மர் பொருதுகளத் தொழியப் பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்" என்னும், அகத்தில் 233) "மறப்படைக் குதிரை மாறா மைந்திற், றுறக்க மெய்திய தொய்யா நல்லிசை, முதியற் பேணிய உதியஞ் சேரல், பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை" என்றும் வந்துள்ளமையால், பாரதப்போரில் இருதிறத்துப் படைக்கும் இவன் உணவளித்ததோடு, அப்போரில் இறந்தவர்க்கு இவன் பிண்டக்கிரியையும் செய்தான் என்று கொள்

ளாகும். அக்காலத்துக் குறியவும் நெடியவுமான கூளிச்சுற்றம் இவனைச் சூழ்ந்திருந்தது (அகம். 233). இவனுடைய நாட்டில் வெளியம் என்னும் ஊர் மிகச்சிறப்புற்று விளங்கிற்று (359). இவன் புதல்வர் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனும், பல்யானைச் செல் கெழுகுட்டுவனுமாவர் (பதிற். 2, 3 பதிகங்கள்).

20. எருமையூரன் (36 ; 115 ; 253):—

இவன் எருமை என்றும் கூறப்படுவான் (அகம். 115; 253). இவனது ஊராகிய எருமையூர், குடநாட்டின்கண்ணுள்ளது (அகம். 115). இவன் வடுக அரசன் (அகம். 253); ஐம்பெருவேளிருள் ஒருவன் (புறம். 19. உரை). இவன் நிரை கவருஞ் சிறப்பு வியப்புறக் கூறப்பட்டுள்ளது. இவனைப் பாடியவர் நக்கீரனாரும், மாமூலனாரும். தலையாலங்கானப் போரில் இவன் நெடுஞ்செழியனாற் கொல்லப்பட்டவன்.

21. எவ்வி (115 ; 126 ; 266 ; 366):—

இவனது நாடு மிழலைக்கூற்றமெனப்படும். இக்கூற்றம் காவிரியால் நீரூட்டப்பெற்றுப் பயங்கெழுமியதாய் விளங்கிற்று. மீன் விற்கும் பாண்மகள் அம்மீனுக்கு விலையாக நெல்லைப் பெறாது முத்துக்களைப் பெறுவளென இந்நாட்டின் செல்வமிகுதியை நக்கீரர் பாராட்டுகிறார் (அகம். 126). மாங்குடி மருதனாரும் "தாங்காவிளையுள் நல்லூர் கெழீஇய வோம்பா வீகை மாவேள் எவ்வி" (புறம். 24) என்பர். குடவாயிற் கீரத்தனாரும் "பொலம்பூண் எவ்வி நீழலன்ன" என்பர் (அகம் 366). மற்றும் இவன் நாடு மருத நிலமும் நெய்தல் நிலமும் மயங்கியுள்ளதென்று மேற்சொன்ன மருதனாரும் கீரத்தனாரும் புகழ்ந்துள்ளார்கள் (புறம் 24; அகம். 366).

இனி இவ்வெவ்வி தொன்முதிர் வேளிர் குடியிற்றோன்றினானவன் (புறம். 24). இவன் சிறந்த கொடையாளியேயன்றி நடுவுநிலைமை தவறாதவனுமாவன் (அகம். 115; 126; புறம். 24; குறுந். 19). இவன், அன்னிக்குப் பலவாறு புத்திசொல்லித் திதியனது புன்னையை வெட்டவேண்டாமென்று அடக்கினவன். இவன் தலையாலங்கானத்துச் செருவென்றுகொண்ட நெடுஞ்செழியனால் மணவாயிலுறத்தூராங்கண் வெல்லப்பட்டுத் தனது முத்தூற்றையும் மிழலைக்கூற்றத்தையும் இழந்தனன் (அகம். 266). "எவ்வி வீழ்ந்த செருவில்" என்றும் (அகம். 115), "எவ்வி யிழந்தவறுமை"

என்றும் (குறுந். 19.), கூறப்பட்டுள்ளமையால், இவன் அந் நெடுஞ் செழியனாலேயே செருவிடை வீழ்ந்தனன் போலும். இவன் நீடூர் கிழவோன் எனப் பாராட்டப்படுவான் (அகம். 266).

22. எழினி (36) :—

இவன் எழினி அதிகமான் தாயாதிகளில் ஒருவன். இவன் தலையாலங்கானத்துப் போரில் நெடுஞ்செழியனால் வென்று கொல்லப் பட்டான் (அகம். 36. புறம். 77.). இவன் ஐம்பெருவேளிருள் ஒருவன் (புறம். 19உரை.).

23. ஏற்றை (44) :—

இவன் சேரன் படைத்தலைவன்; பெரும்பூட் சென்னியைக் கழு மலத்தில் எதிர்த்தவன். ஏறைக்கோன் என்பானொருவன் புறத்துக் (157) கூறப்பட்டுள்ளான். இவ்விருவரும் ஒருவரோ வேறோ தெரியவில்லை.

24. ஐயை (6) :—

இவள் சிறந்த அழகுவாய்ந்த பெண்மணி (அகம். 6). இவள் கற்புடைமை நோக்கித், தித்தன் "ஐயை தந்தை தித்தன்" எனப் பட்டான் (அகம். 6). இவள் தந்தை தித்தன் வரலாற்றை அவன் பெயர் வரிசையிற் கண்டுகொள்க. இவளைப் பாடியவர் பரணர்.

25. கங்கன் (44) :—

இவன் சேரன் படைத்தலைவரில் ஒருவன். பெரும்பூட் சென்னியால் கழுமலத்தில் வெல்லப்பட்டோன் (அகம். 44).

26. கட்டி (44 ; 226) :—

இவனும் சேரன்படைத் தலைவரில் ஒருவனே. முற்சொன்ன பெரும்பூட் சென்னியோடு போரேற்றவன். ஒருகால் இவன் உறையூர்த் தித்தனோடு போர்புரியவந்து, இரவிற் பதிவிருக்கையில், அத்தித்தன் நாளவையில் முழக்கப்பெறும் "பாடின் றெண்கிணைப் பாடுகேட்டு அஞ்சி"ப் பொராது ஓடினோன். இவனைப் பாடியவர் குடவாயிற் கீரத்தனாரும், பரணருமாவர்.

27. கடல்கெழு செல்வி (370) :—

இவர் இலக்குமி தேவியாராவார். இவரைப்பாடியவர் அம் மூவனார்.

28. கடலன் (81) :—

இவன் சிறந்த சூரனேயன்றி இரப்போர்க்கு வரையாது ஈவோன். இவனது ஊர், விளங்கில். இவனைப் பாடியவர், ஆலம் பேரிசாத்தனுர். எருமை வெளியனுர்க்கு மகனுராகிய கடலனுரும் இவனும் ஒருவரோ வேருே தெரியவில்லை.

29 கண்ணனெழினி (197) :—

இவன் எழினி வம்சத்தைச் சார்ந்தவன். இவன் முதுகுன் றத்துக்கிறைவன். சிறந்த வீரன். இவன் வம்சத்துவந்தாரான நல்லெழினி என்பார் பரிபாடலின் 13ஆம் பாடலாகிய திருமாலுக் குரிய பாட்டைப் பாடியுள்ளார்

30. கணையன் (44 ; 386) :—

இவன் சேரன்படைத்தலைவன் (அகம். 44). பெரும்பூட்சென் னியோடு கழுமலத்திற் பொருதவன். ஆரியப்பொருநனுல் பாணன் மற்போரில் தோல்வியுற, இவன் நாணி மறைந்தான் (அகம். 386).

31. கபிலன் (78) :—

இவர் பெரும்புலவர். இவர் வரலாற்றைப் பாடினேர் வரிசை யிற்கண்டு கொள்க.

32. கரிகால்வளவன் (55 ; 125 ; 141 ; 246 ; 376) :—

இவன் நெருப்பினுற் சுடப்பட்டுக் கால் கரிந்தானுதலால், கரி காலன் எனவும், சோழர் மரபினுனதலால் வளவனெனவும் (பழ. 105.) கூறப்படுவோன். இவன் சிறந்த வீரன். பெருஞ்சேரலாத னேடு வெண்ணிப் பறந்தலைக்கண்ணே போர்செய்து அவனைப் புண் ணுறச்செய்தோன். புண்ணுற்ற அச்சேரலாதன் நாணித் தான் கொண்ட வாளொடு வடக்கிருந்தான் (அகம். 55.). இவ்வெண் ணிப்போரில் அச்சேரலாதனுக்குத் துணையாய்ப் பாண்டியனெரு வனும் வேளிர் குடியினருள் பதினெரு கூட்டத்தினரும் வந்து தோற்ரேடினர் (அகம். 246 பொருந். அடி 143-147). இவன் மகளான ஆதிமந்தியின் கணவனை ஆட்டனத்தி கழார்ப் பெருந் துறைக்கண் காவிரிப் புதுப்புனலில் இவன் காண நர்த்தனஞ்செய்து நீராடியபோது, காவிரி அவ்வத்தியைக் கடலிற் கொண்டொளித்தது (அகம். 376). இவன் ஒருகால் வாகைப்பறந்தலையில் ஒன்பது குடைமன்னரை முறியடித்தான் (அகம். 125). இளமையில்

இவன் அரசுரிமையிழந்து பின்பு அதனை யெய்தியவன் (அகம். 141; பழ. 105). இவனுக்குரித்தான இடையாறு என்னும் ஊர் சிறந்த செல்வமுடையது (அகம். 141). இவன் வரலாறு மிகப் பெரிதாதலால், ஈண்டுச் சுருக்கியே வரையப்பட்டது.

33. கவுரியர் (70; 342) :—

இவர் பாண்டியராவர். இவரது நாட்டில் திருவணைக்கரை உள்ளது (அகம். 70). இந்நாட்டிலுள்ள மலையொன்றினிடத்து நீரிழி மருங்கிலே வரையரமகளிர் சிலர் தென்னன் ஒருவன் தொடா வண்ணம் கரந்தனர் (அகம். 342).

34. கழுவுள் (135; 365) :—

இடையர் தலைவனை கழுவுள் என்பானொருவன் பதிற்றுப் பத்தில் கூறப்படுகிறான் (பதிற். 71). இவனும் அவனும் ஒருவனே என்று சொல்லக்கூடவில்லை. இவன் சிறந்த புகழுடையான். இவனது ஊராகிய காமூரில் பூதத்தால் தரப்பட்ட வேங்கைமரம் உள்ள தென்று மதுரை மருதனிளநாகனார் கூறுகின்றார். இவனது காமூரைப் பதினான்கு குடியினராகிய வேளிர் ஒருங்குசேர்ந்து அழித்தனரெனப் பரணர் கூறியுள்ளார். காமூரென்றும் பாடம்.

35. களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் (199) :—

இவன் சிறந்த சேரவரசன். இவன் தந்தை சேரலாதன் (பதிற். 40. பதி). இவன் சிறியவனாயிருக்கையில் இவனது நாட்டை நெடுமிடலும் நன்னன் முதலியோரும் கைப்பற்றிக் கொண்டனர் பதிற் 32; 40). இவன் காளைப் பருவமெய்தியவுடன் சிறந்த வீரனாகி, நெடுமிடலைச் சாய்த்து (பதிற். 32), மேற்றிசைக்கண்ணுள்ளபெருந் துறைச் செருவில் நன்னனைப் பொருதொழித்துத் தான் முன்பு இழந்த நாட்டை மீளப் பெற்றான் (அகம். 199).

36. காரி (35; 209) :—

இவன் மலையமான் திருமுடிக்காரி எனவும் கூறப்படுவான்; இவன் திருக்கோவலூர் அரசன். முள்ளூர் இவனது ஊராகும் (அகம் 209). இவனது பெண்ணையாற்றுக் கொடுங்கால் என்னும் துறை சிறப்பிக்கப்பெற்றுள்ளது (அகம். 35). இவன் கடையெழு வள்ளல்களில் ஒருவன் (புறம். 158). இவன் தன்னை ஒத்த வள்ளலான வல்வில் ஓரியொடு பொருது அவனைக் கொன்று, அவன்

கைப்பற்றியிருந்த கொல்லி மலையைச் சேரலர்க்கு உரிமையாக்கினான் (அகம். 209). இவன் வரலாறு விரிவஞ்சி விடுக்கப்பட்டது.

37. **கானமர் செல்வி** (345) :—

இவள் துர்க்காதேவியாவாள். இத்தெய்வமகள் ஏழிற் குன்றத்துக்குக் காவலாக வெண்சாற் புரவிப்படைகளை அருளினள்.

38. **கிள்ளிவளவன்** (346) :—

இவன் கூடலாங்கண் பழையன் மாறனைப் போரிற்சாய்க்கக் கோதைமார்பன் மிக உவந்தான் இளஞ்சேரவிரும் பொறையால் வெல்லப்பட்ட இளம் பழையன் மாறன் (பதிற். பதி. 90.) இப்பழையன்மாறனுக்குத் தம்பிபோலும்.

39. **குறும்பியன்** (262) :—

இவன் திதியனுடன் சேர்ந்து, அன்னிமிஞிலி உரைத்ததனால், கோசரை உயிர் செகுத்தான்.

40. **கோடுமுடி** (159) :—

இவன் ஒரு சிறந்தவீரன். இவன் குறும்பொறை மலைக்குக் கீழ்பாலுள்ள ஆமூரில் வசித்தவன். பெரிய யானைப்படையுடன்வந்து போரேற்ற வானவனை வென்று, தன் ஆமூரைக் காத்தவன்.

41. **கோசர்** (15 ; 90 ; 113 ; 196 ; 205 ; 216 ; 251 ; 262) :—

இவர் வீரர்களாகிய ஒரு குழுவினர். "நாலூர்க்கோசர்" (குறுந். 15) எனப்படுவார். அகத்தில் துளுநாட்டுக்கோசர் ; செல்லூர்க்கோசர் ; பொதியிற் கோசர் (அகம் 15 ; 90 ; 251) என்பார் கூறப்பட்டுள்ளார். "இரும்பிடம் படுத்த வடுவுடை முகத்தர்" எனவும் சிறப்பிக்கப் பெற்றுள்ளார். "நன்றால் காலையும் நட்பிற் கோடா" ராய்ச் சென்று வழிப்படூஉம் திரிபற்ற அறிவையுடையார் (அகம்.113). இவர்களிற் சிலர் அன்னிமிஞிலி தந்தையைக் கண்களைந் தமை காரணமாகத் திதியனாலும் குறும்பியனாலும் கொல்லப்பட்டனர் (அகம் 196 ; 262). மற்றொருமுறை பொலம்பூட்கிள்ளி என்பான் இக்கோசரது படையைநூறி, அவர் நிலத்தைக்கைக் கொள்ள விரும்பினான்.

42. **கோதை மார்பன்** (346) :—

கிள்ளிவளவன், கூடலிலே பழையன்மாறனைச் சாக்க, இவன் பெரிதும் உவந்தான்.

**43. சிவபெருமான் (கடவுள்வாழ்த்து ; 181) :—**

இவர் திரிமூர்த்திகளுள் ஒருவர். இவ்வகத்துப் பாரதம் பாடிய பெருந் தேவனாரால், இவர் கொன்றைமாலை அணிந்தவரும், மார்பிடத்து யஞ்ஞோபவீத முடையவரும், நுதலிடத்துக் கண்ணுடையவரும், கையிடத்துக்குந்தாலி, மழு, சூலம் என்றவற்றை யுடையவரும், ஏற்றை ஊர்ந்தவரும், உமையொடு சேர்ந்தவரும், செவ்வானன்ன மேனியரும், வக்கிர தந்தங்களையுடையவரும், சிவந்த சடையுடையவரும், சென்னியிடத்துப் பிறையை யுடையவரும், அரையில் புலித்தோலுடையவரும், சாமவேதம் பாடினமணிமிடற்றினை யுடையவரும், அந்தண வடிவினருமாகப் பரவப்பெற்றுள்ளார். "நான்மறை முதுநூல் முக்கட் செல்வன்" எனப்பரணரால் பரவப்பட்டுள்ளார் (அகம் 181).

**44. செம்பியன் (36) :—**

இவன் தலையாலங்கானத்தே நெடுஞ்செழியனால் செருவில் வெல்லப்பட்ட ஒருசோழன். இவனைப்பாடியவர் நக்கீரர்.

**45. செல்லிக்கோமான் (216) :—**

இவன் நாட்டில் பல இளங்கோசர் வாழ்ந்தனர். இவனுக்கு ஆதனெழினி என்றுபெயர். ஒரு களிற்றினோடு இவனுக்குப்போர் நிகழ்ந்த வரலாறு கூறப்பட்டுள்ளது.

**46. சேரல் (36) :—**

இவன் தலையாலங்கானத்திலே நெடுஞ்செழியனால் செருவில் வெல்லப்பட்ட சேர அரசன். இச்சேரல் யானைக்கட் சேய்மாந்தரன் சேர விரும்பொறை அன்று. நெடுஞ்செழியனால், ஆலங்கானத்து வெல்லப்பட்ட இருபெருவேந்தரும் ஐம்பெரு வேளிரும் கொல்லப்பட்டு மரித்தன ரென்பது 77 ஆம் புறப்பாட்டானும், 'எழுவர் நல்வலமடங்கக்...கொன்றுகளம் வேட்டஞான்றை,' என்ற 36 ஆம் அகப்பாட்டானும் அறியப்படுதலானும், யானைக்கட்சேய் மாந்தரன் போரிற்படாது,தன் நாண்மீனை வீழ்மீன் நலிந்தமைபற்றி மரித்தமை 229ஆம் புறப்பாட்டான் அறியப்படுதலானும் இது துணியப்படும்.

**47. சேரலாதன் (55 ; 127 ; 347 ; 396) :—**

இவன் பெருஞ்சேரலாதன் எனவும் வழங்கப்பெறுவன் (புறம். 65). இவன் கரிகாலனொடு வெண்ணிப் பறந்தலையில் போர்

செய்து புண்ணுற்று(அகம். 55),நாணித் தான் கொண்ட வாளொடு வடக்கிருந்தான். இவன் ஒருகால் கடலிற் பிரயாணஞ் செய்து போய்ப் பகைவரது கடம்பினை அறுத்து, அதனால் (அகம். 127, 347) வீரமுரசம் செய்துகொண்டோன். மற்றொருமுறை வடநாடு சென்று, ஆரியரை அலறத்தாக்கி, அவர் அரசரைச் சிறைசெய்து இமயவரையில் தனது விற்பொறியைப் பொறித்தோன் (அகம். 396). இச்சிறந்தவீரன் பகைவர்பால் உயர்ந்த பொன்னுபரணங் களையும் வயிரம் முதலிய இரத்தினங்களையும் எண்ணிறந்தவளவு திறையாகப் பெற்றதோடு, ஒரு பொற்பாவையையும் பெற்றானெனத் தெரிகிறது (அகம் 127). இவற்றை இவன் மாந்தை முற்றத்துக் குவித்துவிட்டுப் புண்ணுக்கு நாணித் துறவு பூண்டு வடக்கிருந்தான் (அகம் 127). அக்காலத்துப் பலசான்றோர் இன்பமும் துன்பமு முடையராய் இவனோடு வடக்கிருந்தனர்.

48. **தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்** (36; 116; 162; 175; 209; 231; 253; 266; 338) :—

இவன் சிறந்தபுலவனும் வீரனு மாவான். இதனைப் புறநானூற்று 72ஆம் பாடலால் அறியலாம். இவனைப் பகைத்துச் சேரன் சோழன் முதலியோர் போர்க்குவர, அவர்களை இவன் முதலிற் கூடற்பறந்தலைக்கண் வென்றோட்டி (அகம். 116), பின்புத் தலையாலங்கானத்தளவுந் துரத்திக்கொண்டுபோய், ஆங்கு அவர்களைக் கொன்றெறிந்தான் (அகம். 36 : புறம் 76 ; 77). இவனுக்குப் பசும்பூட் பாண்டியன் எனவும் (புறம் 76 ; அகம் 162 ; 231; 253 ; 338), பசும்பூண் வழுதி (நற். 358) எனவும், பசும்பூண் (அகம் 266) எனவும் பெயர்கள் வழங்கப்பெறும். இவன் கொங்கர் தலைவனான அதிகனை (குறுந். 393) வென்று, அவன் வெற்பகத்துத் தன் களிறுகளைப்பரப்பினோன் (அகம் 162; 253). இப்போர் வாகைப்பறந்தலையில் நடந்ததென்று ஷை குறுந்தொகைப்பாடலால் அறியலாம். மற்றொருகால் இவன் நீடூர்கிழவனான எவ்வியின் படைவீரரைச் சாய்த்து, மிழலைக்கூற்றத்தூராங்கண் உண்டாட்டு ஆடினான் (அகம். 266).

புறம் 24ஆம் பாட்டால் இப்பாண்டியன் எவ்வியின் மிழலைக் கூற்றத்தையும் முத்தூற்றுக் கூற்றத்தையும் கைக்கொண்டான் என்று அறியலாவது. "அறங்கடைப் பிடித்த செங்கோ லுடனமர்

மறஞ்சாய்த் தெழுந்த வலனுயர் திணிதோட் பலர்புகழ் திருவிற் பசும்பூட்பாண்டியன்" என இவன் மதுரைக் கணக்காயனாராற் புகழ்ப்பெற்றுள்ளான் (அகம். 338). இவனை அகத்துப் பாடிய மற்றையோர் மதுரை நக்கீரர்; பரணர்; ஆலம் பேரிசாத்தனார்; கல்லாடனார்; மதுரை ஈழத்துப் பூதன்றேவனார் என்பார்.

49. **தழும்பன்** (227):—

இவன் பெரிய வீரனும் கொடையாளியுமாவன். உடம்பிற் படைக்கலங்கள் படுத்த தழும்புடைமை நோக்கித் தழும்பனெனப் பட்டான் போலும். "தமிழ் அகப்படுத்த இமிழிசைமுரசின்... தழும்பன்" எனச் சிறப்பித்துக் கூறப்படுவான். வருநற்கு வரையாது ஈவோன். தூங்கல் என்னும் புலவராற் பாட்டப்பெற்ற சிறப்புடையான். இவனுக்கு ஊணூர் உரிமையுடையது (அகம் 227).

50. **தித்தன்** (6; 122; 152; 188; 226):—

இவன் தித்தன் வெளியனெனவும் வீரைவெளியன் தித்தன் எனவுங் கூறப்படுவான் (அகம். 152; 188; 226). இவன் சிறந்த வீரனே யன்றி பெரும்புலவனுமாவன் (அகம். 188.). இவனது தலைநகர் உறையூராகும். இவ்வூரை இவன் பகைவர் கைப்பற்றுவண்ணம் அரண்வலி மிகுத்த புறங்காடுடையதாகவும் படைகாவலுடையதாகவும் செய்து காத்திருந்தனன் (அகம். 122, தொல். பொருள். நச். 68). இவனுக்குக் கற்பிற் சிறந்தாளும் அழகில் மிக்காளுமான ஐயை என்னும் பெயருடைய ஒரு மகள் உண்டு. ஒருகால் வடுக அரசனை கட்டி யென்பான் பாணனொடு சேர்ந்துகொண்டு இத்தித்தனொடு பொரநினைத்து உறந்தைக்கு அருகில் வந்து பதிவிருக்கையில், அவ்வுறந்தைக்கண்ணே இத்தித்தனது நாளவைக்கண் ஒலிக்கப்பெறும் தெண்கிணைப்பாடு கேட்டு அஞ்சிப் பொராது ஓடினன் (அகம். 226). இவன் மகன் போர்வைக்கோப் பெருநற் கிள்ளி.

51. **திதியன்** (25; 322; 331):—

இவன் பொதியிலுக்குத் தலைவன். மிக்க செல்வமுடையோன். ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியனது நண்பன். இவனைப் பாடியவர் அப்பாண்டியனும், பரணரும் மாமூலனாரும்.

52. திதியன் (45 ; 126, 145 ; 196 ; 262):—

இவன் தலையாலங்கானத்து நெடுஞ்செழியனால் செருவில் வெல்லப்பட்ட ஐம்பெருவேளிருள் ஒருவன். திருவழுந்தூரின் கண்ணே அரசுசெய்தவன் (அகம். 196). இவனுக்கும் அன்னிக்கும் பகையுண்டாக, இவனுக்குச் சொந்தமான ஒரு புன்னை மரத்தினை அவ்வன்னி வெட்டி வீழ்த்தினன் (அகம் 45 ; 145). அதுகாரணமாகக் குறுக்கைப் பறந்தலையில் இருவருக்கும் போர் விளைந்தது. அதனில் அன்னி உயிரிழந்தான்.

பின்பு ஒருகால், அன்னிமிஞிலியென்பாள் ஒருத்தி தன்தந்தையைக் கோசர் கண்களைந்தலர் என வந்து முறையிட, இத்திதியனும் குறும்பியனும் அக்கோசரை உயிர் செகுத்தனர். அது கண்டு அவ் வன்னிமிஞிலி பெரிதும் உவந்து தோழுந்தூரில் செருக்குற்று உலவினள் (அகம் 196, 262).

53. திருமால் (59) :—

திருவாய்ப்பாடியிலே ஸ்ரீ கண்ணபிரானாக அவதரித்தருளிய முழுமுதற்கடவுள். பல்லாயிரம் கோப கன்னிகைகளுடன் லீலைகள் செய்து வருகையில் ஒருகால் அக்கோபிகள், தமது வஸ்திரங்களைக் கரையில் அவிழ்த்து வைத்துவிட்டு, நிர்வாணமாக யமுனையில் ஜலக்கிரீடைசெய்ய, அது பிழையென்றுணர்ந்த ஸ்ரீ கண்ணபிரான், அவர்கட்கு நல்லொழுக்கம் அறிவுறுத்தும் பொருட்டு அவரிட்டு வைத்திருந்த ஆடைகளைக் கவர்ந்துகொண்டு குருந்தமரத் தேறிக் கொண்டனர். அக்கோப கன்னிகைகள் நாணித் தாம் இனி அவ்வாறு செய்வதில்லையென்று பிரதிஞ்ஞை செய்து, தமது வஸ்திரங்களைத் தந்தருளுமாறு வேண்டுமளவில், நம்பி மூத்தபிரான் ஆண்டு வந்தாராக, அவர்க்கு எல்லாரும் ஒருங்கே மறைந்து கொள்ளும் பொருட்டுத் தாமேறியிருந்த அக்குருந்த மரத்துக் கொம்பை அவர் போமளவும் தாழ்த்துக் கொடுத்து மறைத்துவைத்தார்.

54. திரையன் (85 ; 340):—

இவன் ஒரு கொடையாளி. தொண்டைமான் இளந்திரையன் என ஒருவன் புறம் முதலிய நூல்களிற் புல்வனாகவும் வீரனாகவும் காணப்படுகிறான். இத்திரையனும் அவனும் ஒருவனோ வேறோ

அறியக் கூடவில்லை. இவ்வகத்துக் கூறப்படும் திரையனுக்கு உரிய ஊர் பவத்திரி; மலை வேங்கடம். இவனைப் பாடியவர் காட்டூர் கிழார் மகனார் கண்ணனாரும், நக்கீரரும்.

55. தூங்கல் (227) :—

இவர் ஒரு புலவர்; இவர் தழும்பனைப் பாடியுள்ளார் என நக்கீரர் கூறுகின்றனர். இவர் தூங்கல் ஓரியாரெனவும் வழங்கப்பெறுவர்.

56. தொண்டையர் (213) :—

இவர் தொண்டை நாட்டினர். இவரது மலை வேங்கடமாகும். இவரைப் பாடினவர் எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார்.

57. நந்தர் (265) :—

இவர் ஒன்பதின்மர் எனச் சரித்திரம் வல்லார் கூறுவர். இவருக்குப்பாடலிபுரம் உரியது. இவர் தமது பெருநிதியத்தைக் கங்கை நீரிடத்து மறைத்துவைத்தனர் (அகம். 265.). இவரைப் பாடியவர் மாமூலனார்.

58. நந்தன் (251) :—

இவன் முற்சொன்ன நவநந்தருள் ஒருவனோ, அன்றிப் பிறனொருவனோ; அதனைத் துணிந்து சொல்ல இவ்வகப்பாட்டைக் கொண்டு இயலவில்லை. இவன்பால் மிக்க திரவிய மிருந்ததென்று மாமூலனார் குறிப்பிட்டுள்ளார்.

59. நம்பிமூத்தபிரான் (59) :—

இவர் இறைவனது அம்சமாய் ஸ்ரீ கண்ணபிரானுக்கு மூத்தவராய்த் திருவவதரித்தருளினர். ஸ்ரீ கண்ணபிரான் கோபிகளது வஸ்திரங்களைக் கவர்ந்துகொண்டு குருந்தமரத்து ஏறியிருக்கையில், இவர் ஆண்டுவந்தாராக, இவருக்கு மறைந்துகொள்ளும் பொருட்டு ஸ்ரீ கண்ணபிரான் தாமேறியிருந்த குருந்தமரத்துக்கொம்பை இவர் போமளவும் தாழ்த்துக்கொடுத்து அக்கோபிகளை மறைத்துவைத்திருந்தார்.

60. நள்ளி (152; 238) :—

இவன் கண்டீரக்கோப் பெருநள்ளி எனப் புறத்துவழங்கப் பெறுவன் (148; 149; 150). இவன் கடையெழுவள்ளல்களில் ஒரு

வன் (புறம். 158.). இவன் சோலையடுக்கத்துக் கடவுட்காந்தள் பலவுண்டு (அகம். 152, 238).

61. நன்னன் (15; 44; 97, 142; 152; 173; 199; 208; 258; 262 349; 356; 392; 396):—

இவன் நன்னன் வேண்மான் எனவும், நன்னன் உதியன் எனவும்(அகம். 97; 258). கூறப்படுவான். இவனுக்கு ஏழிற் குன்றமும் பாழிச்சிலம்பும், பறம்புமலையும் மலைகளாம் (அகம். 152; 356.). வியலூரும்; பாழிநகரும்; பாரமும் ஊர்களாம் (அகம். 97; 15; 152.). இவன் ஏற்றை முதலானரோடு கூடிப் பெரும்பூட்சென்னியை எதிர்த்தான் (அகம். 44). மிக்க வீரமுடையோனுன பிண்டனை வென்றான் (அகம். 152.). இவனது பாழியாங்கண் மிஞிலி * அதிகனென்பான் ஒருவனையும், ஆஅய் எயினன் என்பான் ஒருவனையும் வென்றுகொன்றான் (அகம். 142; 208; 396.). களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் இந்நன்னனைக் குடக்கின்கண்ணுள்ள பெருந்துறைச்செருவில் வென்றொழித்துத் தான் இழந்த நாட்டை மீட்டும் பெற்றான். ஒருகால் இவன் தன் பகையரசனோடு எதிர்த்து நிற்க வியலாது, காட்டிலமர்ந்திருந்தான் (அகம் 392). இவன் தன் நாட்டினின்றும் வெளியே துரத்தப்பெற்ற வரலாறு குறுந்தொகை 73 ஆம் பாட்டினும் குறிப்பிட்டுள்ளது. இவனது பாழியாங்கண் வேண் முதுமாக்கள் நிரம்பப் பொன்னை வைத்துக் காப்புள்ளதாய்ச் செய்திருந்தனர். இவன் சிறந்த கொடையாளி (அகம். 349). இவன் மலையிற் பொற்சுரங்கங்களுள (அகம். 173.).

62. நீரேர்கிழவோன் (266):—

இவன் வரலாற்றை எவ்வி வரலாற்றானறிக.

63. நெடுவேளாவி (1; 66):—

இவன் ஆவியர் குடியிற்றோன்றிய ஒரு கொடையாளி. வையாவிக்கோப்பெரும்பேகன் இவன் மரபிற் சேர்ந்தவன். இவனுக்கு ஊர் பொதினி (அகம். 61). மலையும் பொதினியாம் (அகம். 1). இவன் மழவரை ஓட்டினோன் (அகம். 1.). இவன் குறுநிலமன்னன் (அகம். 1.).

---

* அதிகனென்பது எயினன் என்றிருத்தல் பொருத்தமாகுமென்று தோன்றுகிறது. அஞ்சியின் வரலாற்றைப்பார்க்க.

64. பசும்பூட்பாண்டியன் (162; 231; 253; 266; 338):—

இவன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனு வானெனத் தெரிதலினாலே, அவன் வரலாற்றில் இவன் விருத்தாந் தத்தைக் கண்டுகொள்க.

65. பசும்பூட்பொறையன் (303):—

இவன் ஒளவையாரால் சிறப்பித்துப் பாடப்பெற்ற ஒரு சேரவ ரசன். இவன் கொல்லிக்கு இறைவன்.

66. பண்ணன் (54; 177):—.

இவன் சிறந்தவீரனும் கொடையாளியுமாவான் (அகம். 177) இவன் ஊர் சிறுகுடியென்பது (அகம். 54). காவிரிக்கு வடபால் இவனுக்கு உரியதாய்ப் பிரசித்திபெற்ற ஒரு மாஞ்சோலையுண்டு (அகம். 177). இவன் தென்னவன் மறவன் (புறம். 388).

நப்பண்ணனார் என்றொருவர் பரிபாடலில் 19 ஆம் பாடலைப் பாடியவராகக் காணப்படுகிறார். இப்பண்ணனுக்கும் அவருக்கும் உறவுண்டோ இல்லையோ விளங்கவில்லை. ஆயினும் வித்து வானான சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனுக்கு இவன் நட்பாளனாய், அவனாற்பாடப்பெற்றவனாதலால் (புறம். 173), இவனுஞ் சிறந்த வித்துவானாயிருக்கலாமென்றும், பரிபாடல் 19 ஆம் பாடலைப் பாடியிருக்கலாமென்றும் ஊகிக்க இடமுண்டு.

67. பண்ணி (13):—

இவன் தென்னவன் மறவன். கோட்டூர் என்னும் ஊருக் குத் தலைவன். இக்கோட்டூர் கோடையென்று வழங்கப்பெற்றுள் ளது. "வரைநிலையின்றி இரவலர்க்கீயும்" வள்ளியோனென இவன் புகழப் பெற்றுள்ளான். இவன் களவேள்வி பல செய்துள்ளான்.

68. பதினொரு வேளிர் (246):—

வேளிருள் இவ்வகத்தில் "ஈரெழுவேளி" ரென்றும் "தொன் முதிர் வேளி" ரென்றும் பலவகையினர் கூறப்பட்டுள்ளனர். இப்பதினொருவேளிர் சேரபாண்டியரொடு கூடிக்கொண்டு, வெண் ணிப் பறந்தலையில் சோழன் கரிகாலனை எதிர்த்து வலியழிந்தனர். அக்காலத்து அழுந்தூரின்கண் மிகப்பெரிய ஆரவாரம் உண்டாயிற்று. வேளிர்யாவரென்பதனை "வேளி" ரென்ற விடத்துக் கண்டுகொள்க.

69. பழையன் (44 ; 186 ; 326) :—

இவன் சிறந்த வீரனேயன்றிக் கொடையாளியுமாவன். சோழன் சேனபதி. இவனுக்கு ஊர் போஒர் என்பது; பேளர் என்றும் வழங்கப்பெறும். அது காவிரிபாயும் நன்னாட்டின் கண்ணது(அகம். 326). இவன் கழுமலப் போரிற்பட்டானகப் பெரும்பூட் சென்னி சினஞ்சிறந்து சேரன்படை முதலியான கணையனை யகப்படுத்திக் கழுமலத்தைக்கைப் பற்றிக்கொண்டான் (அகம். 44).

70. பழையன் மாறன் (346) :—

இவனுக்கும் கிள்ளிவளவனுக்கும் கூடலிற் பெரும் போர் நிகழ, இவன் தோல்வியுற்றான்.

71. பாணன் (113 ; 226 ; 325 ; 386) :—

இவன் வடநாட்டின்கண்ணேயிருந்து அரசு செய்துவந்த ஒரு வீரன் (அகம். 325). இவன் நன்னாடு உணவுப்பொருள் நிறைந்து செழிப்புற்றிருந்தது (அகம். 13). இவன் கட்டியோடு சேர்ந்து உறையூர்த் தித்தன்மீது போர்க்குச்சென்று, பொராது ஓடினன் (அகம். 226). ஆரியப் பொருநனால் மற்போரில் தோல்வியுற்றான் (அகம். 386).

72. பாரி (78 ; 303) :—

இவன் தன் மகளிரைக் கொடாமல் மகண் மறுத்தமை காரணமாக மூவேந்தரும் சினந்து, இவனது பறம்பு மலையைச் சூழ்ந்துகொண்டகாலையில், கபிலர் கிளிகளால் நெற்கதிர்கொணரச்சூழ்ந்தமையாலே உணவுப்பொருள்பெற்றுப் பல யாண்டு பொருது, அம்மூவ்வேந்தரையும் வென்றோட்டினேன். இவனது பிற வரலாறு புறத்தில் விரிவாய்க் காணப்படும். ஆண்டை நோக்கி யறிக.

73. பிட்டன் (77 ; 143) :—

இவன் சேரன் படைத்தலைவன் ; சிறந்த வீரன் ; பெருங்கொடையாளி (அகம். 77; 143). இவனது மலை குதிரைமலை யெனப்படும்.

74. பிண்டன் (152) :—

இவன் நிரம்பிய வலிபடைத்தோன் ; சிறந்த வீரன். இவனை வென்றவன் நன்னன்.

75. புல்லி (61 ; 83 ; 209 ; 295 ; 311 ; 359 ; 393) :—

இவன் சிறந்த வீரனேயன்றிக் கொடையாளியுமாவன். இவன் மலை வேங்கடமலையாகும். இவன் நாட்டில் யானைகள் மிகுதி.

76. புன்றுறை (44) :—

இவன் நன்னன் ஏற்றை முதலியோரோடு கூடிக்கொண்டு பெரும்பூட் சென்னியையெதிர்த்துத் தோல்வியுற்றோன்.

77. பூழியர் (6) :—

இவர் பூழிநாட்டவர். பூழிநாட்டில் யானைமிகுதி. இந்நாடு சேரர்க்கு உரியது.

78. பெரியன் (100):—

இவன் சிறந்த கொடையாளி. புறந்தை (பொறையாறு) இவன் ஊராகும். அது சோழ நாட்டகத்தது.

79. பெரும்பூட் சென்னி (44) :—

இவன் சிறந்த சூரன். நன்னன் ஏற்றை முதலியவரைக் கழுமலத்தில் வென்று கணையனை அகப்படுத்தி, அக்கழுமலத்தையும் கைப்பற்றிக்கொண்டவன். இவனது ஊராகிய குடவாயில் காட்டு வருவாய் மிக்கது.

80. பேகன் (262):—

இவன் கடையெழுவள்ளல்களில் ஒருவன் (அகம். 158.). இவனது மனைவி கண்ணகி என்று கூறப்படுவாள். மயிலுக்கு இவன் போர்வைகொடுத்தோன் (புறம். 141.). இவன் மலைக்குக் "கன்மா மலை" என்று பெயர்.

81. போலம்பூட் கிள்ளி (205):—

இவன் சோழவரசன். இவனுக்கு ஊர் காவிரிப்பூம் பட்டினம். இவன் கோசரைவென்ற புகழுடையான்.

82. மத்தி (6 ; 211 ; 226) :—

இவன் சோழன் மறவன் ; பரதவர் கோமான் (அகம். 226). இவனுக்கு ஊர் காவிரிக்கரையிலுள்ள கழாஅர் என்பது (அகம். 6; 226). இவன் எழினி என்பான் பல்லைப் பிடுங்கி வெண்மணிவாயிற் கதவில் அழுத்தினோன் (அகம். 211).

83. **மருதி** (222):—

இவள் ஒரு பெரிய உபகாரி. ஆதிமந்தி தன் காதலனைப் பல விடங்களிலும் தேடியபிறகு கடலிடத்தும் சென்றுதேட, ஆங்கு இவள் ஆட்டனத்தியை அவளுக்குக்காட்டி மகிழ்வித்தவள். கொடும் புறமருதி என்று ஒருத்தி சேனாவரையர் உரைக்கண் (தொல். சொல். 174.) காணப்படுகிறாள். இவ்விருவரும் ஒருவரோ வேறோ தெரிய வில்லை.

84. **மழவர்** (1; 35; 91; 119; 127; 129; 187; 249; 269):—

இவர் மழ நாட்டு வீரர். மழநாடு சேரர்க்கு உரியது; அதனை, "மழவர்மெய்ம்மறை" என்று சேரரைப்புகழும் பதிற்றுப்பத்து அடியான் அறியலாம். இம்மழவர் புலத்தைப் புல்லி வணக்கினான் (அகம் 61). இவர் அயல் நாட்டிலிருந்து ஆத்தந்து ஓம்பும் குண முடையார் (அகம் 35). "தகர்மருப் பேய்ப்பச் சுற்றுபு சுரிந்த சுவன் மாய் பித்தைச் செங்கண் மழவர்" என இவர் தலைமயிர் வருணிக்கப் பெற்றுள்ளது. இவர் செய்யும் பூந்தொடைவிழவு மிகச்சிறப்புடை யது (அகம் 187). கோடைமலை இவர்க்குஉரியது (அகம் 249).

85. **மழுவாள் நெடியோன்** (220):—

இவர் திருமாலின் அம்சமாய் ஜமதக்னி மகரிஷிக்குப் புத்திர ராய்ப் பிறந்தவர். கார்த்தவீரியார்ச்சுனன் இவர் தந்தையைக் கொன்றமையால், இவர் சினஞ்சிறந்து, இருபத்தொரு தலைமுறை மன்னரை மரபோடழித்தனர். தெய்வங்களெல்லாம் பலிபெறு தற்கிடமாகிய செல்லூரிலே இவர் பெரிய வேள்வி செய்தனர். இவ்வேள்வியிலேபோலும் இவர் காசிபனுக்குத் தாம் வென்ற இப் பூமி முழுவதையும் தானஞ்செய்தது.

86. **மாந்தரன் பொறையன் கடுங்கோ** (142):—

இவன் சிறந்த கொடையாளி. இவன் கொடைச்சிறப்பைப் புலவர்கள் பெரிதும் வியந்து பாடியுள்ளார்கள். இவனை அகத்திற் பாடியவர் பரணர்.

87. **மாநிதிக்கிழவன்** (66):—

இவன் குபேரன். சங்கநிதி பதுமநிதிகளையுடைமையால் இவன் நிதிக்கிழவன் எனப்பட்டான்.

88. மிஞிலி (142 ; 148 ; 181 ; 208 ; 396) :—

இவன் சிறந்தவீரன். நன்னனது படைத் தலைவனுய், அவனு டைய பாரமென்னும் நகருக்கு அதிபனுயிருந்தோன் (நற். 265). இவன் அதிகனொருவனைப் பாழியாங்கண் கொன்ருனென்று 142 ஆம் பாட்டால் அறியலாவது. ஈண்டு "அதிகற்கொன்" றென்பது "எயினற்கொன்" றென்றிருத்தல் வேண்டுமென்று தோன்றுகிறது. (அகம் 181, 208 ஆம் செய்யுள்களை நோக்கியறிக.). பிரதிகள் எல்லா வற்றினும் அதிகனென்றே பாடம் காணப்பட்டமையால், அவ்வாறே பதிப்பிக்கப் பெற்றது. ஆஅய் எயினனை இவன் நன்னன் உதவியால் பாழிக்கண்ணே போரிற் கொன்ருன் (அகம் 148 ; 181; 208, 396.).

89. முசிறிமுற்றிய செழியன் (57 ; 149;) :—

முசிறிக் கண்ணே, இவன், பகைவர் களிறுகளைக் கொன்று வீரர்களைப்புண்ணுறச்செய்தவன். இம்முசிறி சுள்ளியம் பேரியாற் றங்கரையிலுள்ளதெனத் தெரிகின்றது (அகம் 149.). அப்போரில் இவன் சேரன் படிமம் ஒன்றை வென்றுகைப் பற்றிக்கொண்டான் (அகம் 149).

90. முசுண்டை (249) :—

இவன் சிறந்த கொடையாளி. ஏற்றுக்குப் 'பொன் கோட்டுச் செறித்துப் பொன்தார் பூட்டி', இமிலில் சந்தன முதலியன அப்பி அலங்கரித்துப் பரிசிலர்க்கு அளிப்பவன். தேர் களிறு முதலியன வும் ஈவோன். இவனுக்கு ஊர் வேம்பி. வேம்பி நாடென ஒன்று திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள தெனச் சாஸனங்களால் அறியப் படுகிறது.

91. முருகன் (1 ; 22 ; 59 ; 98 ; 118 ; 120 ; 149) :—

இவர் சிவபெருமானுக்குத் திருக்குமாராவர். குறிஞ்சி நிலத் திற்குத் தெய்வம். இவர் திருப்பரங்குன்றத்து எழுந்தருளியிருக் கும் சிறப்பு மிகுதியும் பாராட்டப்பட்டிருக்கின்றது. சூரபன்மா என்ற அசுரனை இவர் தடிந்தவரலாறு புராணப் பிரசித்தமானது. சிறந்த வீரத்துக்கும் வனப்புக்கும் இவர் பல புலவர்களாலும் புகழப்பட்டுள்ளார். வெறியாட்டில் இவர் தோன்றுவதாகப் பண்டை நூல்களால் அறியப்படுகின்றது.

92. மோகூர் (251) :—

இவன் ஒரு குறுநில மன்னன். இவன் பணியாமையினலே மோரியர் பகைத்து வந்தனர். இதனைக் கூறியவர் மாமூலனர்.

93. மோரியர் (69 ; 251 ; 281) :—

இவர் வட நாட்டின்கண்ணே இருந்த வீரராவர். இவர் போரை விரும்பித் தென்திசைக்கு வந்தனர். இவர்க்குப் பணியாமற் பகைவனயினவன் மோகூர் என்பான். அம்மோரியர் தாம் வரும்போது தம் தேருருள் செல்ல ஒரு மலையைக் குறைத்தனர்.

94. யவனர் (149) :—

இவர் கிரேக்கர் முதலிய மேல் நாட்டாராவர். இவர் பொன் னேற்றிய மரக்கலங்களுடன் வந்து, முசிறிமுதலிய மேற்றிசைத் துறைகளில் வியாபாரம் செய்து மிளகேற்றிப் போயினர். இமய வரம்பன் நெடுஞ்சேரலாதனல் இவர் ஒருமுறை தண்டிக்கப்பட் டனர் எனப் பதிற்றுப்பத்தால் அறியலாவது (பதிற் 10. பதி).

95. வடவர் (340) :—

இவர் வடநாட்டிலே வசிக்கும் மக்களாவர்.

96. வடுகர் (107 ; 213 ; 253 ; 281 ; 295 ; 375 ; 381) :—

இவரது நாடு வேங்கடத்துக்கு அப்பாலாகும் (அகம் 213.). இவர் மிக்க வீரமுடையவர். இவர் தலைவரிற் கட்டி, எருமை முதலியவர்கள் தமிழ்ப்புலவர்களாற் புகழப்பெற்றுள்ளார்கள். (அகம் 253 ; குறுந் 11). 'கடுங்குரற் பம்பைக் கதநாய் வடுகர்' ; 'கல்லா நீண் மொழிக் கதநாய் வடுகர்; 'கற்றுரிக் குரம்பைக் கதநாய் வடுகர்' என்று புகழப்பெறுவார். இவ்வடுகர்களை முன்னிட்டுக்கொண்டு மோரியர் தென்றிசைமேற் படையெடுத்துவந்தனர் (அகம் 281.). பாழிப் பறந்தலைக்கண் இவர்களை இளம்பெருஞ்சென்னி புறங்கண்டனன்.

97. வல்லங் கிழவோன் (356) :—

இவன் சோழர் மருகன். வல்லங்கிழான் மாறன் என்றொருவன் தொல்காப்பிய மரபியற் சூத்திர (74) உரை மேற்கோளிற் போரறிரியராற் கூறப்படுகின்றன். இவ்விருவரும் ஒருவரோ வேறோ விளங் கவில்லை. இவ்வல்லம் தஞ்சாவூருக்கு அருகிலுள்ளது.

98. வல்வில் ஓரி (208 ; 209) :—

இவன் ஓரி என்றும் வழங்கப் பெறுவான். இவனுக்குக் கொல்லிமலை யுரியது. இவன் கடையெழுவள்ளல்களில் ஒருவன் (புறம் 158.). இவனைக் காரிமன்னன் கொன்று இவனது கொல்லிமலையைச் சேரலர்க்கு ஈந்தான். இக்கொல்லிமலையில் கடவுளால் ஆக்கப்பட்ட பாவை யொன்றிருந்தது. இவன் "மழவர் பெருமகன் மாவள் ஓரி" எனப் புகழப்படுவான் (நற் 52). இவனை அகத்திற் பாடினோர் பரணரும் கல்லாடரும்.

99. வாணன் (117 ; 204 ; 269) :—

இவன் ஒரு கொடையாளி. இவன் ஊரான சிறுகுடிக்கு வடபால் ஒரு கான்யாறுண்டு. இச்சிறுகுடி செழியன் நாட்டகத்தது (நற். 340). பொய்யா நெல்வள முடையது (அகம் 204 ; 269.).

100. வேள்ளிவீதி (147) :—

இவள் வரலாற்றைப் பாடினோர் வரிசையிற் கண்டுகொள்க.

101. வேளிர் (135 ; 206 ; 258 ; 331 ; 372) :—

இவர் நிலங்கடந்த நெடுமுடியண்ணல் வழிவந்தவர் என நச்சினார்க்கினியர் கூறுவர் (தொல். பாயி. உரை.). இவர்களைப் பதினெண்குடி வேளிர் எனவும், பதினான்குவேளிர் எனவும் பதினொரு வேளிர் எனவும் வழங்குவதுண்டு. இவருக்குக் கடற்கரையிலுள்ள வீரைநகர் உரியது (அகம். 206). பாழிக்கண்ணே தொன்முதிர் வேளிர் பலர் பொன்னைச் சேமித்துவைத்துக் காத்திருந்தனர் (அகம் 258 ; 372). திதியனென்பான் வேளிர் கூட்டத்தார் ஒருவரோடு பொருதனன் எனத் தெரிகிறது (அகம் 331). இவர் வரலாற்றினை * "வேளிர் வரலாற்" றிற் பரக்கக் காண்க.

---

* இது, தமிழ் லெக்ஸிகன் ஆபீஸில் தலைமைத் தமிழ்ப்பண்டிதராக வுள்ள ஸ்ரீ. உ. வே. மு. இராகவையங்கார் ஸ்வாமிகளால் ஆராய்ந்து எழுதப்பெற்ற சிறந்த ஒரு நூலாகும்.

ஸ்ரீ:

# உரையாசிரியர் வரலாறு

**குறிப்புரைகாரர்:**—இவ்வகத்தின்முதல் தொண்ணூறுபாட்டிற்குக்குறிப்புரை எழுதினர் இன்னரென்று தெரியவில்லை. இவரது உரையிற் காணப்படும் பலசொன்னயங்களால் இவரை வைணவராகக் கருதலாகும். இவர் குறிப்புரையின்றேல் இவ்வகத்துச் சில பாடல்களுக்கு உண்மைப்பொருள் காண்டல் இக்காலத்து அரிதாகும்.

**தேவன் ;**—இவர் பால்வண்ண தேவனென வில்லவதரையனர் எனவும் கூறப்படுவார். வளவன் நாட்டுள்ளதான இடையள நாட்டு மணக்குடியினர். இடையனுடென்றும் பாடம். இம்மணக்குடி, முதியவூரென்றும், இவர் மரபுதொன்மைசான்றதென்றும் அறியலாவது. பண்டையோர் அகப்பாட்டிற்குக் கூறிய உரை செவ்வியதல்லாதிருத்தலைக்கண்டு, இவர் பாட்டொடுபொருந்த அகவல் நடையாற் கருத்து இயற்றினர் எனப்பாயிரம் கூறுகின்றது.

**வேறோர் உரைகாரர்:**—இவர் சுருக்கமாகப் பல பாடல்கட்கு உரைகூறி யுள்ளார். இவ்வுரை, கருத்துரையாகவும், திணைவிளக்கமாகவும், பிறவாறகவும் அமைந்து கிடக்கின்றது. அடியில்வரும் எண்ணுள்ள பாடல்களுக்கு இவர் உரை காணப்படுகின்றது: 37, 39, 81, 85, 88, 89, 101, 122, 123, 136, 139, 141, 156, 167, 176, 178, 194, 195, 201, 210, 216, 217, 225, 226, 233, 236, 138. 246, 255, 256, 269, 270, 276, 286, 287, 292, 302, 306, 313, 317, 318, 323, 325, 331, 336, 342, 346, 348, 351, 361, 366.



ஸ்ரீ:

# அகநானூற்று ஆராய்ச்சிக்குறிப்பு

[அடியிற்கண்ட நாடுமுதலியன வந்துள்ள பாடல்களின் எண்களை அபிதானக்குறிப்பு; பொருட்குறிப்புகளிற் காண்க]

## க. நாடுகள்.

இடையளநாடு
குட நாடு
கொங்கு நாடு
கோசர் நாடு
துளு நாடு
தொண்டை நாடு
பாணன் நாடு
புகார் நாடு
பூழி நாடு
மழவர் நாடு
மாறோக்க நாடு
வடுகர் நாடு
வேம்பி நாடு
வேளிர்நாடு
முதலியன

## உ. ஊர்கள்.

அஞ்சில்
அட்டவாயில்
அரங்கம்
அரிமணவாயில்
அலைவாய்
அழுந்தூர்
அழும்பில்
அள்ளூர்
ஆமூர்
ஆர்க்காடு
ஆலங்கானம்
ஆலங்குடி
ஆலம்பேரி
ஆலமுற்றம்
ஆவூர்
இடையாறு
உமட்டூர்
உவர்க்கணூர்
உறையூர்
ஊணூர்
எயில்
எருக்காட்டூர்
எருமையூர்
எருமைவெளி
ஐயூர்
ஒக்கூர்
ஓரோடோகம்
ஒல்லையூர்
கடியலூர்
கடுகு
கருவூர்
கழாஅர்
கழுமலம்
கள்ளூர்
காட்டூர்
காமூர்
காவிரிப்பூம்பட்டினம்
கானப்பேர்
குடந்தை
குழுமூர்
குறுக்கை
குறுங்குடி
கூடல்
கொடுங்காலூர்
கொற்கை
சோட்டூர்
கோடி (தனுஷ்கோடி)
கோடிமங்கலம்
கோடியூர்
கோண்டை
கோவல்
சாய்க்கானம்
சிராப்பள்ளி
சிறுகுடி
செயலூர்
செல்லி
செல்லூர்
தகடூர்
தங்கால்
தலையாறு
தொண்டி
நல்லாவூர்
நன்பலூர்

நீடூர்
நொச்சிநியமம்
பருவூர்
பவத்திரி
பாக்கம்
பாடலி
பாரம்
பாழி
பிசிர்
பிரம்பு
புகார்
புறந்தை
பெருங்குன்றூர்
பெருந்துறை
பேரூர்
பொதும்பில்
பொருந்தில்
போஒர்
மணக்குடி
மணவாயிலுறத்தூர்
மதுரை
மருங்கூர்
மாங்காடு
மாந்தை
மாறோக்கம்
முசிறி
முதுபதி
முள்ளியூர்
முள்ளூர்
மோகூர்
மோசியூர்
வஞ்சி
வல்லம்
வாகை
வியலூர்
விளங்கில்
விற்றூறு
வீரை
வெண்ணி
வெண்மணிவாயில்
வெளியம்
வேங்கடம்
வேம்பற்றூர்
வேம்பி
வேளூர்
முதலியன

## ௩. கூட்டத்தார்

ஆரியர்
கவுரியர்
குடவர்
கோசர்
சேரலர்
சோழர்
நந்தர்
மழவர்
மோரியர்
யவனர்
வடுகர்
வேளிர் முதலியோர்

## ௪. தெய்வங்கள்

அருந்ததி
இராமன்
இல்லுறைகடவுள்
உமை
கண்ணபிரான்
கவிரமலைத்தெய்வம்
குபேரன்
கொல்லித்தெய்வம்
சந்திரன்
சிவபெருமான்
சூரியன்
செல்லூர்த்தெய்வம்
நடுகற்கடவுள்
நள்ளியடுக்கத்துச்சூர்
புகார்த்தெய்வம்
பாழியணங்கு
பொதியில்தெய்வம்
மழுவாள்நெடியோன்
முருகன்
வேம்பினடிக்கடவுள்,
வேளூர்வாய்த் தெய்வம் முதலியன

## ௫. ஆறுகள்

அயிரியாறு
ஆன்பொருநையாறு
கங்கையாறு
காவிரியாறு
சுள்ளியாறு
தொழுநையாறு
பெண்ணையாறு
வையையாறு
முதலியன.

## கா. மலைகள்

அதகன்மலை
ஆவிமலை
ஆன்குன்றுமலை
இமயமலை
ஏழில்மலை
கவிரமலை
கன்மாமலை
குதிரைமலை
குறும்பொறைமலை
கொல்லிமலை
கோடைமலை
சிராப்பள்ளிமலை
சிறுமலை
திருப்பரங்குன்றமலை
நள்ளிமலை
பறம்புமலை
பாழிமலை
பொதியின்மலை
பொதினிமலை
முதுகுன்றமலை
முள்ளூர்மலை
மோரியர்குறைத்த [மலை
வேங்கடமலை
வேங்கைசேர்ந்தவெற் [பகம்
முதலியன.

## எ. காடுகள்

அழும்பிற்காடு
ஆஅய்கானம்
ஆலங்கானம்
உம்பற்பெருங்காடு
உறந்தைப்புறங்காடு
ஓரிக்கானம்
குடவாயின்மிளை
சாய்க்கானம்
முள்ளூர்க்கானம்
வல்லத்துப்புறமிளை முதலியன

## அ. புண்ணிய ஸ்தலங்கள்

அரங்கம்
அலைவாய்
அழுந்தூர்
ஆலமுற்றம்
கூடல்
செல்லூர்
தனுஷ்கோடி
பரங்குன்று
பவத்திரி
வேங்கடம்
வேளூர்
முதலியன.

## கூ. நீர்த்துறைகள்

ஆன்பொருநைத்துறை
உறையூர்க்காவிரித்துறை
கழார்ப்பெருந்துறை
கானலம்பெருந்துறை
கூடற்பெருந்துறை
கொடுங்கான்முன்றுறை
கொற்கைப்பெருந்துறை
தொண்டிமுன்றுறை
தொழுணைமுன்றுறை
புகார்முன்றுறை
புறந்தைமுன்றுறை
மாந்தைமுன்றுறை
முசிறிமுன்றுறை
வாகைப்பெருந்துறை
வீரைமுன்றுறை
தனுஷ்கோடித்துறை
முதலியன.

## கு௦. விழவுகள்

உள்ளிவிழவு
உறந்தைவிழவு
கழார்ப்புதுப்புனல்விழவு
கார்த்திகைவிழவு
கூடல்விழவு
பங்குனிவிழவு
பரங்குன்றவிழவு
பூந்தொடைவிழவு
யாழ்விழவு
வேல்விழவுமுதலியன,

## கக. ஆவணங்கள்

கூடல் நாளங்காடி
மருங்கூர்ப்பட்டின ஆவணம்
செல்லூர்க்கோசர் நியமம்
முதலியன.

## கஉ. அவைகள்

உறந்தையவை
கள்ளூர் அவை முதலியன.

## கங. சாதியார்

அண்டர் (இடையர்)
அத்தக்கள்வர்
அந்தணர்
உமணர்
உழவர்
குயவர்
கொல்லர்
தட்டார்
பரதவர்
பழையர்
பாணர்
யானைப்பாகர்
வேளாப்பார்ப்பார்
முதலியோர்.

## கச. தொழில்கள்

அரத்தால் வளைபோழ்தல்
அவலிடித்தல்
உப்புவித்துதல், விற்றல்
ஊன்புழுக்கயர்தல்
ஒற்றுச் செல்லுதல்
கவண்கல்லால்யானையை எறிதல்
கொழுப்பாவெறிதல்
சாத்தெறிதல்
சேக்கொள்ளத்தண்ணுமை கொட்டல்
தினைகாவல்செய்தல், அழுத்தல்
நிரைகவர்தல், மீட்டல்
நெல்லரியுநர் தண்ணுமை கொட்டல்
மீன் உணக்கல்
மீன் விற்றல்
முத்துக் குளித்தல்
முதைப்புனஞ் சுடுதல்
யானைக்கன்றைப் பிடித்தல்
வலம்புரி மூழ்குதல்
முதலியன.

## கரு. பிராணிகள்

அசுணம்
அத்திரி
அரா
ஆளி
எருது
எருமை
எலி
ஏறு
ஒட்டகம்
ஓந்தி
காடி
கலைமான்
கழுதை
குதிரை
குரங்கு
கோண்மா
சிங்கம்
செந்நாய்
செம்மறித் [துரூஉ
பசு
பன்றி
புலி
முசுக்கலை
முயல்
முள்ளம்பன்றி
யாடு
யானை
வருடை
வெளில் அணில்
முதலியன.

## கசா. பறந்தலைகள்

ஆமூர்ப் பறந்தலை
கழுமலப் பறந்தலை
குறுக்கைப் பறந்தலை
கூடற் பறந்தலை
தலையாலங்கானப் பறந்தலை
பருவூர்ப் பறந்தலை
பாழிப் பறந்தலை.
பெருந்துறைப் பறந்தலை 199
மணவாயிலுறத்தூர்ப் பறந்தலை
முசிறிப் பறந்தலை
வல்லப் பறந்தலை
வாகைப் பறந்தலை
வெண்ணிப் பறந்தலை 13
முதலியன.

## கஎ. சில அரிய வழக்குகள்

கழங்குக்குறி பார்த்தல்

குடவோலை யெடுத்துப் பிரமாணஞ் செய்தல்

நுளைச்சியர் சுறவுக்கோடு நட்டு வருணனுக்குப் பரவுக்கடன் கொடுத்தல்

பார்ப்பார் தூதுசெல்லுதல்

மகளிர் சுவரில் கோடிட்டு நாளெண்ணுதல், பல்லிச் சகுனங்கேட்டல், பிறைதொழுதல், வேங்கை மலர் கொய்யப் புலி புலி யென்று கூவல்

சிறுமியர் அலவனாட்டுதல், கிளிகடிதல், வண்டலயர்தல், சிற்றில் விழைத்துச் சிறுசோறடுதல், ஓரையாடுதல்

மன்னர் கடகுக்காரரை யழைத்துப் படைகாண்டல்

வீரர்போர்க்குப் போகுமுன் நடுகல்லைப் பூசித்தல், நன்னிமித்தம் பார்த்தல்

வேளாப்பார்ப்பான் சங்கறுத்தல்

கொங்கர் மணியரை யார்த்து மறுகின் ஆடுதல்

மணமகளைப் புதல்வர்ப்பெற்றமகளிர் நால்வர் குளிப்பாட்டல்

இடையர் இடபத்தின் கழுத்தில் மூங்கிற்குழாயில் உணவடைத்துக் கட்டி நிரைமேய்த்துச் செல்லல்.

இறந்த வீரனுக்குரிய நடுகல்லிடத்து அவன்பிடித்த வேல்முதலிய கருவிகளை ஊன்றியும் சார்த்தியும் வைத்தல்

உமணர் கழுதைமேல் உப்புப்பொதியேற்றிச் செல்லல்.

ஸ்ரீ:

# பாடிய ஆன்றோர் சாதிமுதலியன

## க. அந்தணர்

ஆமூர்க் கௌதமன் சாதேவனார்
கடியலூர் உருத்திரங்கண்ணனார்
கபிலர்
கோடிமங்கலம் வாதுளிநற் சேந்தனார்.
செல்லூர்க் கோசிகன்கண்ணனார்
நக்கீரனார்
மதுரை ஆசிரியர் நல்லந்துவனார்
மதுரை இளங்கௌசிகனார்
மதுரைக் கணக்காயனார்
மதுரைக் கௌணியன் தத்தனார்
மாமூலனார்

## உ. அரசர்

அண்டர்மகன் குறுவழுதியார்
அதியன் விண்ணத்தனார்
ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியன்
கோட்டம்பலத்துத்துஞ்சிய சேரமான்
சேரமான் இளங்குட்டுவன்
பாண்டியன் அறிவுடைநம்பி
பாண்டியன் உக்கிரப் பெருவழுதி
பாலைபாடிய பெருங்கடுங்கோ
மருதம்பாடிய இளங்கடுங்கோ
முடங்கிக்கிடந்த நெடுஞ்சேரலாதன்
வீரைவெளியன் தித்தனார்.

## ங. இடையர்

இடைக் காடனார்
இடையன் சேந்தன் கொற்றனார்
இடையன் நெடுங்கீரனார்
இருங்கோன் ஒல்லை ஆயன் செங்கண்ணனார்

## ச. எயினர்

எயினந்தைமகன் இளங்கீரனார்
விற்றூற்று மூதெயினனார்

## ரு. கூத்தர்

உறையூர் முதுகூத்தனார்
மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன்கூத்தனார்
மதுரைக் கூத்தனார்
மதுரைத் தமிழ்க்கூத்தன் கடுவன்மள்ளனார்
மதுரைத்தமிழ்க்கூத்தன் நாகன்தேவனார்

## சா. தட்டார்

தங்காற் பொற்கொல்லனார்
மதுரைப் பொன்செய்கொல்லன் வெண்ணாகனார்

| எ. மந்திரத்தலைவர் | அ. வண்ணக்கர் |
|---|---|
| ஏனாதிநெடுங்கண்ணனார் | வடமவண்ணக்கன் பேரிசாத்தனார் |

## க. வணிகர்

காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்
மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனார்
மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார்
மதுரைப்பண்டவாணிகன் இளந்தேவனார்

## க0. வேளாளர்

ஆர்க்காடுகிழார்மகனார் வெள்ளைக்கண்ணத்தனார்
ஆவூர்கிழார் மகனார் கண்ணத்தனார்
ஆவூர் மூலங்கிழார்
ஒரியார்மகனார் பெருந்தலைச் சாத்தனார்
உமட்டூர்கிழார்மகனார் பரங்கொற்றனார்
காட்டூர்கிழார்மகனார் கண்ணனார்
கோடியூர் கிழார்மகனார் நெய்தற்றத்தனார்
செல்லூர் கிழார்மகனார் பெரும்பூதங் கொற்றனார்
நல்லாவூர்கிழார்
நெய்தற்சாய்த்துய்த்தஆவூர்கிழார்
நொச்சிநியமங்கிழார்
பெருங்குன்றூர் கிழார்
பொதும்பில்கிழார் வெண்கண்ணனார்
மதுரைக் காஞ்சிப்புலவர்
மதுரை மருதங் கிழார்மகனார் பெருங்கண்ணனார்
மருங்கூர்கிழார் பெருங்கண்ணனார்
மாற்றூர்கிழார்மகனார் கொற்றங்கொற்றனார்
வடமோதங்கிழார்

## கக. அருந்தொடரால் பெயர்பெற்றோர்

அந்திஇளங்கீரனார்
இம்மென்கீரனார்
ஊட்டியார்
நோய்பாடியார்
வண்ணப்புறக்கந்தரத்தனார்

## 12. பெண்பாற்புலவர்

அஞ்சில்ஆந்தைமகள்நாகையார்
அள்ளூர்நன்முல்லையார்
ஒக்கூர்மாசாத்தியார்
ஔவையார்
கழார்க்கீரனெயிற்றியார்
குமிழிஞாழார் நப்பசலையார்
நக்கண்ணையார்
போந்தைப்பசலையார்
மதுரைநல்வெள்ளியார்
முள்ளியூர்ப்பூதியார்
வெள்ளிவீதியார்
வெறிபாடியகாமக்கண்ணியார்

ஸ்ரீ:

# ஐந்திணைக்குமுரியபாடல்கள்

[எண், பாட்டெண்]

---

## முல்லை

4, 14, 24, 34, 44, 54 64, 74, 84, 94, 104, 114, 124, 134, 144, 154. 164, 174, 184, 194, 204, 214, 224, 234, 244, 254, 264, 274, 284, 294, 304, 314, 324, 334, 344, 354, 364, 374, 384, 394.

## குறிஞ்சி

2. 8, 12, 18, 22, 28, 32, 38, 42, 48, 52, 58, 62, 68, 72, 78, 82, 88, 92, 98, 102, 108, 112, 118; 122, 128, 132, 138, 142, 148, 152, 158, 162, 168, 172 178, 182, 188, 192, 198, 202, 208, 212, 218, 222, 228, 232, 238, 242, 248, 252, 258, 262, 268, 272, 278, 282, 288, 292, 298, 302, 308, 312, 318, 322, 328, 332, 338, 342, 348, 352, 358, 362, 368, 372, 378, 382, 388, 392, 398.

## மருதம்

6, 16, 26, 36, 46, 56, 66, 76, 86, 96, 106, 116, 126, 136, 146, 156, 166, 176, 186, 196, 206, 216, 226, 236, 246, 256, 266, 276, 286, 296, 306, 316, 326, 336, 346, 356, 266, 376, 386, 396.

## நெய்தல்

10, 20, 30, 40, 50, 60, 70, 80, 90, 100, 110, 120, 130, 140, 150, 160, 170, 180, 190, 200, 210, 220, 230, 240, 250, 260, 270, 280, 290, 300, 310, 320, 330, 340, 350, 360, 370, 380, 390, 400.

## பாலை

1, 3, 5, 7, 9, 11, 13, 15, 17, 19, 21, 23, 25, 27, 29, 31, 33, 35, 37, 39, 41, 43, 45, 47, 49, 51, 53, 55, 57, 59, 61, 63, 65, 67, 69, 71, 73, 75, 77, 79, 81, 83, 85, 87, 89, 91, 93, 95, 97, 99, 101, 103, 105, 107, 109, 111, 113, 115, 117, 119, 121, 123, 125, 127, 129, 131, 133, 135, 137, 139, 141, 143, 145, 147, 149, 151, 153, 155, 157, 159, 161, 163, 165, 167, 169, 171, 173, 175, 177, 179, 181, 183, 185, 187, 189, 191, 193, 195, 197, 199, 201, 203, 205, 207, 209, 211, 213, 215, 217, 219, 221, 223, 225, 227, 229, 231, 233, 235, 237, 239, 241, 243, 245, 247, 249, 251, 253, 525, 257, 259, 261, 263, 265, 267, 269, 271, 273, 275, 277, 279, 281, 283, 285, 287, 289, 291, 293, 295, 297, 299, 301, 303, 305, 307, 309, 311, 313, 315, 317, 319, 321, 323, 325, 327, 329, 331, 333, 335, 337, 339, 341, 343, 345, 347, 349, 351, 353, 355, 357, 359, 361, 363, 365, 367, 369, 371, 373, 375, 377, 379, 381, 383, 385, 387, 389, 391, 393, 395, 397, 399.

மேற்கூறிய எண்களுள், ஒற்றைப்பட்ட பாடல்கள் எல்லாம் பாலையாகவும், பத்துத் தொடர்ந்தன வெல்லாம் நெய்தலாகவும், நாலுதொடர்ந்தன வெல்லாம். முல்லை யாகவும், இரண்டும் எட்டுந் தொடர்ந்தன வெல்லாம் குறிஞ்சியாகவும், ஆறுதொடர்ந்தன வெல்லாம் மருதமாகவும், இம்முறையே நெடுந்தொகைப் பாடல்கள் நோக்கப்பட் டிருத்தல் காண்க.



ஸ்ரீ:

# இலக்கணக்குறிப்பு

[எண், பாட்டெண்]

ஸ்ரீ:

## இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய நூற்பெயர் முதலியவற்றின் முதற்குறிப்பு விளக்கம்

அகப். விள. உரை - அகப்பொருள் விளக்க உரை; உரைகாரர்
அகம் - அகநானூறு
அரங்கு - அரங்கேறுகாதை
இரா - இராச பாரம்பரியம்
இறுதிக்கட் - இறுதிக்கட்டுரை
இறை. களவு - இறையனார் களவியல்
இடை - இடைக்காடன் பிணக்குத்தீர்த்த படலம்
எ - து - என்பது; என்றது
எழுத்து - எழுத்ததிகாரம்
ஐங்கு - ஐங்குறுநூறு
கட - கடவுள்வாழ்த்து
கலி - கலித்தொகை
கலிங் - கலிங்கத்துப்பரணி
குறுந் - குறுந்தொகை
சம் - சம்பந்தமூர்த்திநாயனார்
சிலப் - சிலப்பதிகாரம்
சிறுபாண் - சிறுபாணாற்றுப்படை
சிந் - சீவகசிந்தாமணி
சூ - சூத்திரம்
செந் - செந்தமிழ்
சேனு - சேனாவரையர்; சேனாவரையம்
சொல் - சொல்லதிகாரம்
திருவிளை - திருவிளையாடற் புராணம்
தேவா - தேவாரம்
தொகு - தொகுதி
தொல் - தொல்காப்பியம்
நச் - நச்சினார்க்கினியர்; நச்சினார்க்கினியம்
நள - நளவெண்பா
நற் - நற்றிணை
பக் - பக்கம்
பகு - பகுதி
பதிற் - பதிற்றுப்பத்து
பரி - பரிபாடல்
பழ - பழமொழி
பி - ம் - பிரதிபேதம்
புறத் - புறத்திணையியல்
புறம் - புறநானூறு
பேரா - பேராசிரியர்; பேராசிரியம்
பொருள் - பொருளதிகாரம்
மரபு - மரபியல்
மலை - மலைபடுகடாம்
முருகு - திருமுருகாற்றுப்படை
யா. வி - யாப்பருங்கலவிருத்தி
வஞ்சின - வஞ்சினமாலை
வள். மா - திருவள்ளுவமாலை
வேளிர்வ - வேளிர்வரலாறு



ஸ்ரீ:

# நெடுந்தொகை

ஆகிய

# அகநானூறு

---

## மூலமும் - உரையும்

---

### கடவுள் வாழ்த்து

கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்
தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்
மார்பி னஃதே மையி னுண்ஞா
ணுதல திமையா நாட்ட மிகலட்டுக்
5 கையது கணிச்சியொடு மழுவே மூவாய்
வேலு முண்டத் தோலா தோற்கே
யூர்ந்த தேறே சேர்ந்தோ ளுமையே
செவ்வா னன்ன மேனி யவ்வா
னிலங்குபிறை யன்ன விலங்குவால் வையெயிற்
10 றெரியகைந் தன்ன வவிர்ந்துவிளங்கு புரிசடை
முதிராத் திங்களொடு சுடருஞ் சென்னி
மூவா வமரரு முனிவரும் பிறரும்

யாவரு மறியாத் தொன்முறை மரபின்
வரிகிளர் வயமா னுரிவை தைஇய
15 யாழ்கெழு மணிமிடற் றந்தணன்
றாவி றாணிழற் றவிர்ந்தன்று வுலகே.

என்பது : கடவுள் வாழ்த்து.

— பாரதம்பாடிய பெருந்தேவனார்.

வரி

2. தாரன், மாலையன், மலைந்த கண்ணியன் - என்றது, தார் ஓர் விசேடமாக இடுவது; மாலை அழகுக்கு இடுவது; கண்ணி போர்ப்பூ.

இனித் தார் சேர்ப்பதாகவும், மாலை கட்டுவதாகவும், கண்ணி தனித்துத் தொடுப்பதாகவும் இவ் வேறுபாடு களென உரைப்பாரும் உளர்.

இம் மூன்று பெயரையும் முறைநிரீஇ 3. அவன் மார்பினது குற்றமற்ற நுண்ணிய நூலென்க.

5. கணிச்சி - குந்தாலி; 5. மூவாய் வேல் - சூலம்; 5. கையது என்னும் ஒருமை மழுவிற்குக் கொடுக்க. 6. வேலும் என்னும் உம்மை எச்ச உம்மை.

10-11. எரி யகைந்தன்ன - எரி கப்புவிட்டாற்போன்ற; அவிர்ந்து விளங்குதல் - விட்டு விளங்குதல். சடை 11. திங்களொடு சுடருஞ் சென்னி என்க. 8. மேனியையும், 11. சென்னியையும் 15. மணிமிடற்றினையும் உடைய அந்தணன் எனக் கூட்டுக.

13. யாவரும் - முன் சொன்ன யாவரும்; மரபு - தன்மை.

15. யாழ்கெழு மணிமிடறு - சாமவேதம் பாடின மணி போலும் சிறத்தையுடைய மிடறு; அந்தணன் - இவையெல்லாம் உடையானோர் அந்தணன். என, இவ் வுருவைத் தியானம் பண்ணுக என்றவாறு.

16. தவிர்ந்தன்று - தங்கிற்று, ஆதலால், இவ்வுலகிற்கு இடையூறு இல்லையென்றவாறு.

ஸ்ரீ:

முதலாவது

# களிற்றியானை நிரை

## 1. பாலை

வண்டுபடத் ததைந்த கண்ணி யொண்கழ
றுருவக் குதிரை மழவ ரோட்டிய
முருக னற்போர் நெடுவே ளாவி
யறுகோட் டியானைப் பொதினி யாங்கட்
5 சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
கற்போற் பிரியல மென்ற சொற்றாம்
மறந்தனர் கொல்லோ தோழி சிறந்த
வேய்மருள் பணைத்தோ ணெகிழச் சேய்நாட்டுப்
பொலங்கல வெறுக்கை தருமார் நிலம்பக
10 வழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலி
னிழறேய்ந் துலறிய மரத்த வறைகாய்
பறுநீர்ப் பைஞ்சுனை யாமறப் புலர்தலி
னுகுநெற் பொரியும் வெம்மைய யாவரும்
வழங்குந ரின்மையின் வௌவுநர் மடியச்
15 சுரம்புல் லென்ற வாற்ற வலங்குசினை

நாரின் முருங்கை நவிரல் வான்பூச்
சூரலங் கடுவளி யெடுப்ப வாருற்
றுடைதிரைப் பிதிர்விற் பொங்கிமுன்
கடல்போற் றோன்றல காடிறந் தோரே.

என்பது : பிரிவிடை யாற்றளாய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

— மாமூலனார்.

வரி

1. ததைந்த - சிதறின, மலர்ந்த.

2. உரு - உருவ என ஈறு திரிந்தது. உட்கத்தக்க குதிரை என்றலுமாம்.

2. மழவரை ஓட்டிய; 3. ஆவிநெடுவேள் - குறுநில மன்னன்.

4. அறு கோடு - அறுத்துத் திருத்தின கொம்பு; சிங்கத்தை வென்ற என்றுமாம்; பொதினி - ஆவி மலை.

5. காரோடன் - பணையான்; பயின் - அரக்கு.

6. கல் - சாணை; அரக்குங் கல்லுங் கூட்டிச் செய்த கல்லை வேறு பிரிக்க ஒண்ணாதென்று 'கற்போற் பிரியலம்' என்றார். 4. பொதினியிடத்துச் 6. சொல்லிய சொல் என்க.

9. வெறுக்கை - செல்வம்; தருமார் - தரவேண்டி 19. காடு இறந்தோர் - எனக் கூட்டுக.

11. தேய்ந்து - தேய; உலறிய - கேரான; காய்பு - காய.

14. வெளவுநர் - ஆறலைப்பார்.

16. நவிரல் - சூதல்.

17. சூரல் - சுழித்தடித்தல்; சூரற்கடுவளி - சூறாவளிக்காற்று; அம் - சாரியை; ஆர் - ஆர்ப்பு.

18-19. முன் கடல் - கடல் முன்; காடிறந்தோர் 7. மறந்தனர் கொல்லோ எனக் கூட்டுக.

11. மரத்த 13. வெம்மைய 15. ஆற்ற என்றவை காடு என் பதனோடு கொள்ளும்.

## 2. குறிஞ்சி

கோழிலை வாழைக் கோண்மிகு பெருங்குலை
யூழுறு தீங்கனி யுண்ணுநர்த் தடுத்த
சாரற் பலவின் சுளையொ டூழ்படு
பாறை நெடுஞ்சுனை விளைந்த தேற
5 லறியா துண்ட கடுவ னயலது
கறிவளர் சாந்த மேறல் செல்லாது
நறுவீ யடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்குங்
குறியா வின்ப மெளிதி னின்மலைப்
பல்வேறு விலங்கு மெய்து நாட
10 குறித்த வின்ப நினக்கெவ னரிய
வெறுத்த வேஎர் வேய்புரை பணைத்தோ
ணிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்
டிவளு மினைய ளாயிற் றந்தை
யருங்கடிக் காவலர் சோர்பத னொற்றிக்
15 கங்குல் வருதலு முரியை பைம்புதல்
வேங்கையு மொள்ளிணர் விரிந்தன
நெடுவெண் டிங்களு மூர்கொண் டன்றே.

என்பது: பகற்குறிக்கட் செறிப்பறிவுறீஇத் தோழி வரைவு கடாயது.

— கபிலர்.

வரி

1. கோழிலை - கொழுவிய இலை; கோள் - காய்; குலையிடத்துக் 2. கனி என்க.

3. ஊழ்படு - முறைமைப்பட்ட.

5. அறியாதுண்டல் - இதனை யறியாது நீர் வேட்கையால் நீரென்று உண்டல்.

6. சாந்தம் ஏறுதென்றது, மரமாயிற் சாந்தமே உள்ளதென்று.

7. வீ அடுக்கம் - பூப்படுக்கை.

8. குறியா இன்பம் என்றது, முயற்சியும் உளப்பாடும் இன்றி வந்த இன்பமெனக் கடுவனுக்குந் தலைவனுக்கும் ஏற்பக்கொள்க.

10. எவன் அரிய - என் அரிய.

11. வெறுத்த - மிக்க, செறிந்த; வரையுடைய வேயை ஒத்த பெருந்தோள். பணைத்தோள் 13. இவள் எனக் கூட்டுக.

12-13. நிறுப்ப நில்லா நெஞ்சம் - நின்ற நிலையினின்றும் அழியாமல் நிறுத்தவும், அவ்வளவில் நில்லாத நெஞ்சம். நெஞ்சமொடு நின்மாட்டு 13. இனையளாயினள் இவளும்.

13-14. தந்தையுடைய காவலர்: சோர்பதன் - இ[illegible]பதம்.

15. கங்குல் வருதலுமுரியை என்றது, இவ[illegible] நின்னை யின்றியமையாளாய், நின்னைக் காண[illegible] வேண்டி, நின் வரவிற் குடன்பட்டிருத்தலான், வருதற்குரியை நீ என்றவாறு. பகற்குறியேயன்றிக் கங்குல் வருதலுமுரியை.

16. வேங்கையும் விரிந்தன என்றது, தினைப்புனம் அறுத்து இற்செறிப்புண்டாள் என்றவாறு. எனவே, பகற்குறியும் மறுத்துக், 14. காவலர் சோர்பதனொற்றி எனவே இரவுக்குறி யருமை கூறி, அதுவும் மறுத்துத், தோழி வரைவுகடாயினவாறு.

17. நெடுவெண்டிங்கள் என்றார் ஆதித்தனுக்கு மேலாகலான். ஊர்கொண்டது என்றது, நிரம்பிற்று என்றவாறு. வளர்தல்கொண்டது என்றுமாம். வளர்பிறையின்றிக் கல்யாணநாட் கொள்ளாராகலின், அதுவும் ஆயிற்றென்றாள்.

கடுவனது தேனை யறியாது நுகர்ந்து, பின்பு தனது தொழிலாகிய மரமேறலு மாட்டாது, வேறோரிடத்துச் செல்லவு மாட்டாது, தனக்கு அயலாகிய சந்தனத்தின் நிழலிற் பூமேலே உறங்குகின்றாற்போல நீயும் இக்கள வொழுக்கமாகிய இன்பம் நுகர்ந்து, நினது தொழிலாகிய அறநெறியையுந் தப்பி, இக்களவினை நீங்கி வரையவு மாட்டாது, இக்களவொழுக்கமாகிய இன்பத்திலே மயங்கா நின்றாய் என்றவாறு.

## 3. பாலை

இருங்கழி முதலை மேஎந்தோ லன்ன
கருங்கா லோமைக் காண்பின் பெருஞ்சினைக்
கடியுடை நனந்தலை யீன்றிளைப் பட்ட
கொடுவாய்ப் பேடைக் கல்கிரை தரீஇய
5 மான்றுவேட் டெழுந்த செஞ்செவி யெருவை
வான்றோய் சிமைய விறல்வரைக் கவாஅற்
றுளங்குநடை மரையா வலம்படத் தொலைச்சி
யொண்செங் குருதி யுவறியுண் டருந்துபு
புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை
10 கொள்ளை மாந்தரி னானாது கவரும்
புல்லிலை மராஅத்த வகன்சே ணத்தங்
கலந்தர லுள்ளமொடு கழியக் காட்டிப்
பின்னின்று துறக்கு நெஞ்ச நின்வாய்
வாய்போற் பொய்ம்மொழியெம் மெவ்வமென் களைமா
15 கலிழ்த முன்ன காண்பின் செவ்வா
யந்தீங் கிளவி யாயிழை மடந்தை
கொடுங்குழைக் கமர்த்த நோக்க
நெடுஞ்சே ணாரிடை விலங்கு ஞான்றே.

என்பது: முன்னொருகாலத்து நெஞ்சினாற் பொருள்வலிக்கப் பட்டுப் பிரிந்தான் தலைமகன், பிரிந்து இடைச்சுரத்தினின்று அவள் நலநயந்து மீளலுற்ற நெஞ்சினைக் கழறிப்போய்ப் பொருண்முடித்துவந்த தலைமகன் பின்னும் பொருள்வலிக்கப் பட்ட நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது.

— எயினந்தைமகனார் இளங்கீரனார்.

வரி

1. மேஎந்தோல் - மேவின தோல்.
3. கடி - காவல், உயரத்தால் எற ஒண்ணாமைபற்றி. இளைப் பட்ட - காவற்பட்ட; வலைப்பட்ட என்றுமாம்.
4. அல்கு இரை - மிக்க இரை.

5. மான்று வேட்டு எழுந்த - மயங்கி இரை வேட்டு எழுந்த; எருவை - பருந்தின் ஒரு சாதி.

6. விறல் வரை - தன் பெருமையால் பிறமலையை வென்ற வெற்றியையுடைய மலை.

7. வலம்பட - வலத்தே வீழ; வெற்றிபட என்றுமாம். தொலைச்சி - கொன்று.

8. உவறி உண்டு - ஊற்றி உண்டு; அருந்துபு - ஆர்ந்து.

9. கலவு - மூட்டுவாய்; அதுகழிந்தகடுமுடை; முடை ஆகு பெயரால் தசை, முடைநாற்ற முடைத்தாகலான்.

9. முடை 5. எருவை 10. கவரும் எனக் கூட்டுக. 10. கவரும் 11. அத்தம் என்க.

12. கலந்தரல் உள்ளமொடு கழியக் காட்டி என்றது — ஆபரணம் தரவேண்டும் என்னும் உள்ளத்தாலே கழிந்து போவதாக என்னை அறிவித்து.

13. துரக்கும் - முடுகும்; நெஞ்சம் - விளி; 13-14. நின் வாயின் மெய்போன்ற பொய்ம்மொழி எமது வருத்தத்தை எப்படிப் போக்கவற்று.

17. குழைக்கு அமர்த்த - குழையொடு மாறுபட்ட; 17. நோக்கம் வந்து 18. நெடுஞ்சேண் ஆரிடையிலே தடுக்கும் அன்று 13. நின் 14. பொய்ம்மொழி எப்படியாற் களைய வற்றோ எனக் கூட்டுக.

## 4. முல்லை

முல்லை வைந்நுனை தோன்ற வில்லமொடு
பைங்காற் கொன்றை மென்பிணி யவிழ
விரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பிற்
பரலவ லடைய விரலை தெறிப்ப
5 மலர்ந்த ஞாலம் புலம்புபுறக் கொடுப்பக்
கருவி வானங் கதழுறை சிதறிக்
கார்செய் தன்றே கவின்பெறு கானங்
குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நரம்பார்ப் பன்ன வாங்குவள் பரியப்

10 பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுற லஞ்சி
மணிநா வார்த்த மாண்வினைத் தேர
னுவக்காண் டோன்றுங் குறும்பொறை நாடன்
கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது
15 நெடும்பெருங் குன்றத் தமன்ற காந்தட்
போதவி ழலரி னாறு
மாய்தொடி யரிவைநின் மாணலம் படர்ந்தே.

என்பது: தோழி தலைமகளைப் பருவங்காட்டி வற்புறுத்தியது.

— குறுங்குடி மருதனார்.

வரி

1. முல்லை வைந்நுனை என்றது - நுனையையுடைய மொட்டை. இல்லம் - தேற்றாமரத்திற் பூ; முதல்கூறச்சினை.

2. பிணி-மொட்டு. 3. இரும்பு திரித்தன்ன-இரும்பை முறுக்கினொலொத்த மருப்பு; 3. மருப்பின் 4. இரலை என்க.

4. அவலடைய - பள்ளங்களெல்லாம்; தெறித்தல் - துள்ளுதல். 5. புலம்பு - நீர்பெறாத வருத்தம்; புறக் கொடுத்தல் - புறத்தே போதல். 6. வானம் - மேகம். 7. கானம் கானத்தை; கார் - பருவம்; பதம்.

8. குரங்குளைப் பொலிந்த-வளைந்த தலையாட்டத்தாற் பொலிந்த; புரவியினது 9. வள்பரியத் 13. தோன்று நாடன் என்க. 9. நரம்பு * ஆர்த்தன்ன 11. பறவை என்க.

11. பறவை - வண்டு; பேதுறல் - மயக்கமுறுதல்; அஞ்சுதல் - அருளான் அஞ்சுதல். 12. தேரன் - தேரனாய். 13. குறும் பொறை - சிறு மலை.

14. உறந்தைக்குணாது குன்றமென்றது, உறையூர்க்குக் கீழ்ப்பக்கத்ததாகிய சிராப்பள்ளி மலை. 17. அரிவை-விளி;

17. நின்னலநினைந்து 13. தோன்றுநாடன் எனக்கூட்டுக.

பி - ம். 1. வைந்நுதி 5. புறங்கொடுப்ப; 12. யாத்த, தேரவன்., 13. உதுக்காண்.

---

* 'ஆர்ப்பன்ன' என்பது நச்சினார்க்கினியர் கொண்ட பாடம். தொல். பொருள். செய்யு. - 104. ம் சூத்திர உரை.

## 5. பாலை

அளிநிலை பொறாஅ தமரிய முகத்தள்
விளிநிலை கொள்ளாள் டமியள் மென்மெல
நலமிகு சேவடி நிலம்வடுக் கொளாஅக்
குறுக வந்துதன் கூரெயிறு தோன்ற
5 வறிதகத் தெழுந்த வாயன் முறுவலள்
கண்ணிய துணரா வளவை யொண்ணுதல்
வினைதலைப் படுதல் செல்லா நினைவுடன்
முளிந்த வோமை முதையலங் காட்டுப்
பளிங்கத் தன்ன பல்காய் நெல்லி
10 மோட்டிரும் பாறை யீட்டுவட் டேய்ப்ப
வுதிர்வன படூஉங் கதிர்தெறு கவாஅன்
மாய்த்த போல மழுகுநுனை தோற்றிப்
பாத்தி யன்ன குடுமிக் கூர்ங்கல்
விரனுதி சிதைக்கு நிரைநிலை யதர
15 பரன்முரம் பாகிய பயமில் கான
மிறப்ப வெண்ணுதி ராயி னறத்தா
றன்றென மொழிந்த தொன்றுபடு கிளவி
யன்ன வாக வென்னுநள் போல
முன்னங் காட்டி முகத்தி னுரையா
20 வோவச் செய்தியி னொன்றுநினைந் தொற்றிப்
பாவை மாய்த்த பனிநீர் நோக்கமொ
டாகத் தொடுக்கிய புதல்வன் புன்றலைத்
தூநீர் பயந்த துணையமை பிணையன்
மோயின ளுயிர்த்த காலை மாமலர்
25 மணியுரு விழந்த வணியழி தோற்றங்
கண்டே கடிந்தனஞ் செலவே யொண்டொடி
யுழைய மாகவு மினைவோள்
பிழையலண் மாதோ பிரிதுநா மெனினே.

என்பது: பொருள்வயிற் பிரியக்கருதிய தலைமகன் தன்னெஞ்சிற்குச்சொல்லிச் செலவழுங்கியது.

— பாலை பாடிய பெருங்கடுங்கோ.

வரி

1. பொருது அமரிய - பொருமையாலே மேவின.

2. விளிநிலை - அழைக்கும் நிலை; கொள்ளாள் என்றது போக்கிற்கு உடன்படாது ஆற்றுளாய் நின்ற நிலையைப்பற்றி; தமியள் - நாண்முதலான குணங்களொழியத் தானேயாதல்.

3. அவ்வடியாலே நிலம் வடுக்கொள்ள என்க. இயல்பாக மெத்தென நடக்கும் அடி, இப்பொழுது நிலம் வடுக்கொள்ள நடந்தவசத்தால் நிலத்தைக் காலாற் கீறி வடுப்படுத்தி என்றுமாம்.

5. வறிது - சிறிது. அகம் - இடம். 6. கண்ணியது உணரா அளவை - நாம் கருதியது தான் அறிவதற்கு முன்பே. 7. வினை - ஆள்வினை.

7. அதனை நாம் தலைப்படுதல் செய்யாதகல, 3. நிலத்தைக் காலால் கீறி வடுப்படுத்தி என்றுமாம்; கருத்துடனே. 8. முலையற்காடு; அம் - சாரியை; 10. மோடு - உயரம்; ஈட்டுதல் - குவித்தல். 11. உதிர்வன - உதிர்ந்து; படுதல் - உண்டாதல். 12. மாய்த்தல் - நீட்டுதல். மழுகுதல் - தேய்தல்; தோற்றி - தோற்றுவித்து. 13. பாத்தி அன்ன - பதித்து வைத்தாலொத்த; குடுமி - தலை; 14. நிரை நிலை அதர - கல்லொழுங்கு பட்ட நிலைமையையுடைய வழிகள்.

15. முரம்பு - வன்னிலம்.

17. தொன்றுபடு கிளவி - இயற்கைப் புணர்ச்சிக் காலத்துச் சொன்ன வார்த்தை. 18. அன்னவாக - அங்ஙனம் சொல்லிக் கழிக. 19. முன்னம் - குறிப்பு. 20. ஒன்று நினைந்து ஒற்றி - போக்கு உடம்படாமையை நினைந்து துணிந்து;

21. பாவை - கண்ணிற்பாவை; பனிநீர் - நடுக்கத்தைச் செய்கிற நீர்; நீர் நோக்கம்-நீரையுடைய பார்வை. 22. ஒடுக்கிய - அணைத்த. 23. பிணையல் - செங்கழுநீர் மாலை. 25. மணி - பவளம்; தோற்றம் - காட்சி. 26. கண்டே என்னும் ஏகாரம் ஈற்றசை;

26. ஒண்டொடி யென்பது தொடங்கி ஆற்றலாற் கூறினன்.

14. அதர 15. கானம் என்க.

